|| ஸ்ரீஹரி: ||

# குரு இல்லாமலேயே முக்தி பெற முடியாதா?

क्या गुरु बिना मुक्ति नहीं ?(तमिल)





## ஸ்வாமி ராம்ஸீகதாஸ்

# குரு இல்லாமலேயே முக்தி பெற முடியாதா?

क्या गुरु बिना मुक्ति नहीं ? (तमिल)









## ஸ்வாமி ராம்ஸுகதாஸ்

வெளியீடு : கோவிந்த பவன் கார்யாலணம்
கீதா ப்ரஸ், கோரக்புர் - 273 005. (உ.பி.)

First Edition : 2003 5000 Copies

விலை : 5.00
Price :

தமிழாக்கம் : R. தேவராஜன்

கிடைக்குமிடம் :

**கோபால் ஸேவா ட்ரஸ்ட்**

81, பகவத் கீதா நகர்,
மோசிகீரனார் வீதி,
ஈரோடு - 638 003.
போன் : 2213976
பேக்ஸ் : 0424-2213274

॥ஸ்ரீஹரி:॥



# முன்னுரை

நான் ஸத்ஸங்கம் நடத்தச் சென்ற இடங்களில் பலரும் என்னிடம் 'குரு-தத்வம்' பற்றி வினவினர். அது குறித்த விளக்கவுரைகளால் அவர்கள் தெளிவு பெற்று நிறைவடைந்தனர். அனைவரும் பயன்பெற வேண்டும் என்னும் நோக்கத்துடன் அவர்கள் 'குரு-தத்வம்' பற்றிய புத்தகம் வெளியிடுமாறும் என்னிடம் வற்புறுத்தினார். குருதத்வம் குறித்துத் தெளிவு பெறச் செய்யும் நோக்கத்துடன் இப்புத்தகம் வெளியிடப்படுகிறது.

'குரு' தொடர்பான எனது ஆழ்ந்த ஆராய்ச்சியின் உட்கருத்தைப் புரிந்த கொள்ளாதோர் பலரும் நான் குருமார்களைப் பழித்துரைப்பதாகவும், அவர்களைக் கண்டிப்பதாகவும் கருதுகிறார்கள். இது முற்றிலும் தவறு. நான் குருவைப் பழிக்கவில்லை. போலித்தனத்தையே பழிக்கிறேன். குருவை யாரும் கண்டிக்க இயலாது. குருமார்கள் என்னிடம் மிகுந்த கருணை புரிந்துள்ளனர்; எனது மனத்தில் அவர்களிடம் ஆழ்ந்த மரியாதையும் உள்ளது. அவர்களால் நான் பெற்ற நன்மைகள் பல. ஆனால் மக்களை ஏமாற்றும் போலி குருமார்களைப் போற்றுவது எங்ஙனம்? அவர்கள் இகழத்தக்கவர்களே.

தற்காலத்தில் உண்மையான குரு கிடைப்பது அரிதாகவே உள்ளது. பகட்டும், போலித்தனமும் பெருகி வருகின்றன. ஆகவேதான் அறநூல்களில் கலியுகத்தில் வாழும் போலிக் குருமார்களையும் குறித்து நன்கு எச்சரிக்கை செய்யப்பட்டுள்ளது. ஆகவே உய்வு பெறுவதில் உண்மையான நாட்டமுடைய ஸாதகர்களின் நன்மைக் கருதி "குரு இல்லாமலேயே முக்தி பெற முடியாதா?" என்னும் தலைப்பில் இச்சிறு புத்தகம் வெளியிடப்படுகிறது.

இதைப் படிப்போர் கவனத்துடன் புத்தகத்தின் உட்கருத்தை உணர்ந்து கொண்டு உண்மையான ஈடுபாட்டுடன் இறைவனிடம் புகலடைவார்களாக! அவர்கள் தனிநபர்களைப் பின்பற்றாமல் தத்வத்தை மட்டுமே பின்பற்றுவோராக வேண்டும்.

அன்புடன்-

**ஸ்வாமி ராம்ஸுகதாஸ்**

# பொருளடக்கம்

॥ஸ்ரீஹரி:॥



# தேவநாகரி எழுத்துகள்

இப்புத்தகத்தில் இடம் பெறும் ஶ்லோகங்களைப் பிழையின்றி உச்சரிக்க உதவியாக, ஆங்கில எழுத்துகளின் துணைகொண்டு, 2, 3, 4 என்ற குறியீடுகளுடன் வடமொழி எழுத்துகளுக்கு நிகரான தமிழ் ஒலி வடிவங்கள் தரப்பட்டுள்ளன.

| | | | |
|---|---|---|---|
| க<br>ka क | க$_2$<br>kha ख | க$_3$<br>ga ग | க$_4$<br>gha घ |
| ச<br>ca च | ச$_2$<br>cha छ | ஜ<br>ja ज | ஜ$_{}$<br>jha झ |
| ட<br>ta ट | ட$_2$<br>tha ठ | ட$_3$<br>da ड | ட$_4$<br>dha ढ |
| த<br>ta त | த$_2$<br>tha थ | த$_3$<br>da द | த$_4$<br>dha ध |
| ப<br>pa प | ப$_2$<br>pha फ | ப$_3$<br>ba ब | ப$_4$<br>bha भ |
| ஷ<br>sha ष | ஸ<br>sa स | ஜ்ஞ<br>gna ज्ञ | க்ஷ<br>ksha क्ष |
| ஶ<br>śha श | | | ரு<br>ṛi ऋ |

'ஶ' என்னும் எழுத்து, பிசகு, கசடு என்னும் சொற்களில் வரும் 'ச'வைப் போல ஒலிக்கும்.

'ரு' என்னும் எழுத்து, எருது, விருது என்னும் சொற்களில் வரும் 'ரு'வைப் போல ஒலிக்கும்.

ஸம்ஸ்க்ருத சுலோகங்களில் சில இடங்களில் 'ऽ' அல்லது 'ऽऽ' என்னும் குறியீடுகளைக் காணலாம். இதற்கு 'அவக்$_3$ரஹம்' என்று பெயர். இந்த இடங்களில் முறையே 'அ', 'ஆ' என்னும் எழுத்துகள் தொக்கி நிற்கின்றன என்பது பொருள்.

॥ஸ்ரீஹரி:॥

॥ஓம் ஸ்ரீபரமாத்மநே நம:॥

# 1. குரு என்பவர் யார்?

நம்முடைய சாஸ்த்ரங்களிலும், நடைமுறையிலும் குருவின் பெருமை, தேவை வெகுவாகக் காணப்படுகிறது. முதலில் 'குரு' என்பவர் யார்? என்பதைச் சற்று ஆராய்வோம். எந்த விஷயத்தில் யாரிடமிருந்து நமக்கு அறிவின் ஒளி கிடைக்கிறதோ, நமது அறியாமை நீங்குகிறதோ அந்த விஷயத்தைப் பொருத்தமட்டில் அவர் நமக்கு குரு ஆவார். வழி தெரியாத இடத்தில் ஒருவர் சரியான வழி காட்டினால், நாம் ஏற்றுக்கொண்டாலும் ஏற்றுக் கொள்ளாவிடினும் அவரே அந்த விஷயத்தில் நம்முடைய குரு ஆகிறார். மணநாளில் ஓர் ஆணையும் பெண்ணையும் மந்த்ரபூர்வமாகச் சேர்த்து வைக்கும் புரோஹிதரும் குரு ஆவார். வாழ்நாள் முழுவதும் அவர்கள் கணவன்-மனைவியாக இணைந்து வாழ்கின்றனர். மனைவி பதிவிரதையாக ஆகிறாள். ஆனால் அவர்களுக்கு அந்தப் புரோஹிதரின் நினைவுகூட இருப்பதில்லை; அவரை நினைவு கூர்தல் வேண்டும் என்று சாஸ்த்ரங்களும் கூறவில்லை. இதுபோன்றே பகவானுடன் நம்மை ஸம்பந்தப்படுத்திவிட்ட அளவிலேயே குருவின் பணி முடிந்து விடுகிறது. குருவின் வேலை மனிதனை பகவானுடன் தொடர்பு கொள்ளச் செய்வதே. மனிதனைத் தம்முடன் தொடர்பு கொள்ளச் செய்வது குருவின் வேலையன்று. நமது நோக்கமும் பகவானுடன் ஸம்பந்தம் கொள்வதே, குரு என்னும் தனிநபருடனன்று. உலகில் தாய்-தந்தை, மனைவி-மக்கள் என்னும் உறவின் அடிப்படையிலான தொடர்புகள் ஏற்கனவே பல நம்மிடம் உள்ளன. இது தவிர குரு என்ற நபருடன் புதிய ஒரு தொடர்பு கொள்வதால் என்ன லாபம்? பகவானுடனான நமது தொடர்போ எப்பொழுதும் இயல்பாகவே இருந்து வருகிறது.

ஏனெனில் ஜீவன் பகவானுடைய ஸநாதன அம்சம் என்று கீதை சொல்கிறது — "மமைவாம்ஸோ ஜீவலோகே ஜீவபூ$_4$த: ஸநாதந:" (கீதை 15/7). "ஈஸ்வர அம்ஸ ஜீவ அபி$_3$நாஸீ" என்கிறது ஸ்ரீராமசரித மானஸம். பகவானுடனான மறந்துபோன உறவை நினைவு படுத்துபவரே குரு; அதுதான் குருவின் பணி. அந்த உறவை அவர் புதிதாக ஏற்படுத்துவதில்லை.

நான் ஒன்று கேட்க விரும்புகிறேன். முதலில் தோன்றியது யார் - தந்தையா? மகனா? இதற்குத் தந்தையே முதலில் தோன்றியவன் என்றுதான் நீங்கள் விடை தருவீர்கள். ஆனால் உண்மையில் ஒரு மகன் பிறந்த பின்புதான், ஒருவன் தந்தை என்னும் ஸ்தானம் பெறுகிறான். ஒருவன் முதலில் கணவன் ஆகிறான். பின்னர் சந்ததி தோன்றியதும் தந்தை ஆகிறான். இதுபோலவே சிஷ்யனுக்குத் தத்வ ஞானம் ஏற்பட்ட பிறகே "குரு" என்னும் ஸ்தானம் கிடைக்கிறது. சிஷ்யனுக்கு ஞானம் பிறப்பதற்கு முன்னர் ஒருவர் குரு ஆவதில்லை.

கு$_3$காரஸ்சாந்த$_4$காரோ ஹி ருகாரஸ்தேஜ உச்யதே ।
அஜ்ஞாநக்$_3$ராஸகம் ப்$_3$ரஹ்ம கு$_3$ருரேவ ந ஸம்ஸய: ॥
*(குருகீதா)*

*"இந்த குருகீதையின் சுலோகத்தில் 'கு' என்பது அக்ஞானத்தையும், 'ரு' என்பது அறியாமையின் நீக்கத்தையும் குறிக்கிறது. 'குரு' என்பவர் அக்ஞான இருளை நீக்குபவர்".*

கோவிந்தனைப் பற்றிச் சொல்லி, அவரை எதிரே கொணர்ந்து நிறுத்துவதில்தான் 'குரு' என்பது பொருள் படைத்தாகிறது. இதொன்றுமில்லாமல் வெறுமனே 'குரு', 'குரு' என்றால் அது ஏமாற்றுவேலைதான். குரு ஆவதால் குரு ஸ்தானம் கிடைத்துவிடாது. தனியாக நிற்கும் குருவுக்கு யாதொரு பெருமையும் கிடையாது. எவருடன் கோவிந்தனும் நிற்கிறாரோ அவரே 'குரு' என்று கூறத்தக்கவர்.

குரு என்பவர் பகவானைத் தருபவர். சடங்கு, சொற்பொழிவுகள் நிகழ்த்துபவரும், சீடர்களைத் திரட்டு பவரும், பணம் சேர்ப்பவரும், ஆடம்பர வழிபாடுகளை நடத்துபவரும் குரு ஆகார்.

மனத்தின்கண் சீடனின் உய்வுக்கான பெருவிருப்பம் கொள்பவர்தான் உண்மையான குரு. குருவிடம் உள்ளார்ந்த பக்தி கொண்டவனே உண்மையான சீடன்.

**கோ வா கு$_3$ருர்யோ ஹி ஹிதோபதே$_3$ஷ்டா**
**ஶிஷ்யஸ்து கோ யோ கு$_3$ருப$_4$க்த ஏவ ।**

*"உய்வுக்கான உபதேசமளிப்பவரே குரு; அவரிடம் ஆழ்ந்த பக்தி கொண்டவனே சீடன்" என்று ஸ்ரீஆதிசங்கரர் 'ப்ரச்னோத்தர ரத்ன மாலிகை'யில் அருளிச் செய்துள்ளார்.*

உண்மையான குருவும் கிடைத்து சிஷ்யனும் உண்மையான உள்ளத்துடன் அவருடைய ஆணைகளைப் பிழையின்றி கவனமாகப் பின்பற்றினால் அவன் கடைத்தேறுவதில் யாதொரு ஐயமும் இல்லை.

ஸ்பரிச வேதிக்கல்லால் இரும்பு பொன்னாகவில்லை யெனில் ஒன்று ஸ்பரிச வேதிக்கல் போலியாக இருக்க வேண்டும்; இல்லையெனில் இரும்பில் குறையிருக்க வேண்டும்; அல்லது இடையில் ஏதேனும் தடை இருக்க வேண்டும். இவையின்றி இரும்பு தங்கமாவதில் வேறென்ன காரணம் இருக்க முடியும்! இதுபோலவே சிஷ்யன் தத்வ ஞானம் பெறவில்லையெனில் குரு 'தத்வப்ராப்தி' பெறாதவனாக இருக்க வேண்டும். இல்லையெனில் சிஷ்யன் குருவின் ஆணைகளைச் சிரமேற்கொண்டு கடைப்பிடிக்கா தவனாக இருக்க வேண்டும்; இல்லையெனில் இடையில் கபட எண்ணங்கள் இருக்க வேண்டும்.

இன்னார் குரு என்பதாலோ இன்னார் சிஷ்யன் என்பதாலோ உய்வுக்கு உத்தரவாதம் பெற்றதாகாது.

— ✿ — ✿ —

## 2. உண்மையான குரு

சிஷ்யனின் உய்வுக்கான வழிகளில் உள்ளார்ந்த அக்கறை கொள்பவரே உண்மையான குரு. நமது உய்வில் நாட்டம் கொள்ளாதவர் உண்மையான குரு ஆகமாட்டார். தம்மை குருவாக ஏற்பினும், ஏற்காவிடினும் நாம் உய்வு பெற வேண்டும் என்று உளமார விரும்புபவரே குரு ஆவார். சீடர்களைச் சேர்த்துக் கொள்ள வேண்டும், குரு ஸ்தானத்தில் அமரவேண்டும் என்பன போன்ற ஆசைகள் அவரிடம் இருப்பதில்லை. செல்வத்தில் நாட்டத்துடன் குரு ஸ்தானம் பெற விழைபவர் 'தனதாஸர்' ஆவார். குருவாக விருப்ப முள்ளவர் பிறரைக் கடைத்தேற்ற இயலாது. தற்காலத்தில் பணத்தைப் பெரிதாக மதிக்காத பெரிய பணக்காரர்களிடம் பணம் பெறும் நோக்கில் அவர்களின் குரு ஆகிவிடுகிறார்கள். இது எத்தகைய இழிநிலை. உங்களிடமிருந்து எதையாவது பெற விரும்புபவர் உங்களுக்கு குரு ஆகமுடியுமா? அவர் உங்களைக் காட்டிலும் தாழ்ந்தவரன்றோ!

ஜோ ஜக்₃ கீ ஆஸா கரை தோ ஜக₃த் கு₃ரு வோ த₃ாஸ ।

*"உலகில் ஆசையுள்ளவனுக்கு உலகம் குருவாகிறது. அவன் அதற்கு அடிமையாகிறான்".*

உண்மையான ஒரு மஹாத்மாவுக்கு குரு ஸ்தானத்தில் அமரும் பகட்டு இருப்பதில்லை. உலகம் உய்வுபெற வேண்டும் என்னும் ஒரே எண்ணம் மட்டுமே உள்ளது. நானும் உண்மையான மஹாபுருஷர்களைத் தேடும் பணியில்தான் ஈடுபட்டுள்ளேன். மஹாபுருஷர்களைச் சந்தித்தும் இருக்கிறேன். அவர்களில் யாரும் 'நீ என்னுடைய சிஷ்யனாகி உய்வு பெறுவாய்' என்று என்னிடம் சொன்னது கிடையாது. குரு ஸ்தானம் பெறுவதில் ஈடுபாடு உள்ளவர்களே 'குருவின்றி முக்தியில்லை. ஆகவே குருவை ஏற்றுக் கொள்ள வேண்டும்' என்றவிதமான பிரசாரங்களில் ஈடுபட்டு வருகின்றனர்.

சமகாலத்தில் வாழ்பவரை குருவாகக் கொள்வதாலேயே முக்தி என்னும் நியதியும் கிடையாது. மஹாபுருஷரான சரணதாஸ்ஜீ பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்டவரான ஸ்ரீசுகப்ரம்மத்தை குருவாகப் பெற்று, அவரிடமே தீக்ஷை பெற்றார். உண்மையான சிஷ்யனுக்கு குரு தாமே முன் வந்து தீக்ஷை அளிக்கிறார். உண்மையான சிஷ்யனுக்கு குருவைத் தேட வேண்டிய தேவையில்லை. அவர் தாமே கிடைத்து விடுவார். ‘உண்மையான ஈடுபாடுள்ளவன் ஒரு மஹாபுருஷரை குருவாகப் பெறுவதில் சிறிதும் ஐயமில்லை’ என்று ஸ்ரீராமசரித மானஸம் மொழிகிறது.

சிஷ்யன்தான் குருவைத் தேடியடைய வேண்டும் என நாம் நினைக்கலாம். ஆனால், உண்மையில் உண்மையான மஹாபுருஷர்கள்தாம் சிஷ்யரைத் தேடிக் கொண்டிருக்கின் றனர். அவர்களிடம் தனித்த கருணை நிரம்பியுள்ளது. அவர்களது கருணைக்குத் தாய்ப்பாசத்தை உவமையாகக் கூறலாம். தாயின் நிலை உலகிலேயே உயர்ந்தது. அவளே ஒருவனுடைய முதல் குரு. குழந்தை தாயிடம் பிறக்கிறது; அவளால் பேணி வளர்க்கப்படுகிறது. முற்றிலும் தாயையே சார்ந்துள்ளது. குழந்தையின்றித் தாய் இருக்க முடியும். ஆனால் தாயின்றிக் குழந்தை வாழ முடியாது. ஒரு பெண் வெகுகாலம் குழந்தையின்றி இருந்து மணமான பின்னரே குழந்தையையும் பெறுகிறாள். அக்குழவியின்றிப் பலகாலம் கழிந்துள்ளாள். இத்தனை இருந்தும் தான் பட்டினியுடனி ருந்தாலும் குழந்தை பசியுடனிருக்க அவளது இயல்பு இடமளிப்பதில்லை. தான் துன்பங்களைப் பொறுத்துக் கொண்டு குழந்தையை வளர்க்கிறாள். இதுவே ஓர் உண்மையான குருவினது இயல்பு. யாரை சிஷ்யராக ஏற்றுக் கொள்கிறாரோ அவர் உய்வு பெறுவதிலேயே கண்ணும் கருத்துமாக இருப்பவரே உண்மையான குரு. சிஷ்யரை உய்விக்கும் திறமை அவரிடம் இருக்க வேண்டும். இதை நான் நேரில் பார்த்துமிருக்கிறேன்.

ஒரு ஸாது இருந்தார். தம்மிடம் வருபவரை சிஷ்யராகக் கருதாமல் தோழராகவே நடத்தி வந்தார். அந்த அன்பருக்குக் கொடிய நோய் தோன்றியது. மருந்துகளால் அந்நோய் குணம் ஆகாததால் தன் அன்பரை வற்புறுத்தி அந்நோயைத் தாமே ஏற்றுக் கொண்டார். அந்த அன்பரின் நோய் அகன்றது. இத்தகைய ஆற்றல் படைத்தவரே குருவாக முடியும். ஆனால், இத்தகைய ஆற்றல் இருந்தாலும் அவர் யாரையும் கடைசிவரையில் தம்முடைய சீடராக ஏற்கவில்லை.

தற்காலத்தில் 'குருவாக ஏற்பவரைக் கடவுளைக் காட்டிலும் பெரியவராகக் கருத வேண்டும்' என்று கூறிக் கொண்டு பகவானை வழிபடாமல் குரு என்னும் நபரை வழிபட ஆரம்பித்து விடுகின்றனர். இது நரகத்திற்கு இட்டுச் செல்லும் வழி. ஒரு ஸாது தம்முடைய சீடர்கள் தம்மைக் கடவுளைக் காட்டிலும் உயர்ந்தவராக மதிப்பதைக் கண்டு சீடர்களைச் சேர்த்துக் கொள்வதை நிறுத்திவிட்டார். சீடர்களால் பகவானைப் பற்றிக் கொள்ள இயலவில்லை. ஆனால் தனிநபரை குரு என்று கூறிக் கொண்டு பிடித்துக் கொள்கிறார்கள். பகவானை விட்டுத் தனிமனிதரையே பிடித்துக் கொள்வது பேரழிவுக்கான வழி.

சீடர்களைத் தம்மிடமே ஈடுபடுத்துபவர் ஸ்ரீராமசரித மானஸத்தில் இடம்பெறும் கபடமுனியான காலநேமி போன்றோர்க்கு நிகராவார். நம்முடைய குரு, தாய், தந்தை, உற்றார், உறவினர் எவரும் பகவானுக்கு நிகராக நன்மை செய்பவர் ஆகார். ஸ்ரீராமசரித மானஸம் இக்கருத்தைக் கிஷ்கிந்தா காண்டத்தில் கூறுகிறது.

பகவானின் ஸ்தானத்தில் தான் அமர்ந்துகொண்டு வழிபாடு-மரியாதைகளைப் பெறுவது, சீடர்களைச் சேர்த்துக் கொள்வது, புகழ், செல்வம் பெறுவது இவற்றில் ஆசையுள்ளவர் தாமே கடைத்தேற இயலாது எனில் பிறரைக் கடைத்தேற்றுவது எவ்வாறு?

ப்ரதாபபானு என்ற மன்னர் கபட முனியால் வஞ்சிக்கப்பட்ட வரலாறு ஸ்ரீராமசரித மானஸத்தில் இடம் பெறுகிறது. இத்தகைய வஞ்சகரால் தற்காலத்தில் மக்கள் ஏமாற்றப்பட்டு இழிநிலை எய்துகிறார்கள். தன்னுள் வேறு யாதொரு விருப்பமும் இல்லாமல் பிறர் உய்வு பெறவேண்டும் என்னும் ஒரே எண்ணம் மட்டும் உள்ளவரால்தான் பிறரையும் ஆசையற்றவராக்க இயலும்.

பிறரை வலிவிழக்கச் செய்பவன் முதலில் தான் வலிமை இழக்கிறான். பிறரைத் திறமையாளனாக்குபவன் தானே ஆற்றல் படைத்தவனாகிறான். இது நிச்சயமான உண்மை. உண்மையான குருவால்தான் சீடனையும் குருவாக்க இயலும். பகவான் அனைவரிலும் உயர்ந்தவர். ஆகவே அவர் யாரையும் ஒருபோதும் சிறியவனாக்க முடியாது. பகவானைப் புகலடைபவன் உலகில் உயர்ந்து நிற்கிறான். பகவான் ஜீவர்களைத் தோழமை உணர்வோடு பார்க்கிறார். அவர்களைத் தமக்கு நிகராக்குகிறார். அவர் யாரையும் அடிமை கொள்ள (சீடராகவே இருத்திக் கொள்ள) விழைவதில்லை. குஹன் வேடுவனாயினும் பக்தியே வடிவானவன். விபீஷணன் ஸாதக நிலையில் இருந்தவர், ஸுக்ரீவன் போகத்தில் நாட்டமுடையவர். இராமபிரான் மூவரையுமே தோழராக்கிக் கொண்டார். அர்ஜுனனோ தம்மை பகவானின் சிஷ்யராகவே கருதினார் - "ஶிஷ்யஸ்தேऽஹம் ஶாதி$_4$ மாம் த்வாம் ப்ரபந்நம்" (கீதை 2/7). ஆனால் பகவான் தம்மை குருவாகக் கருதாமல் அர்ஜுனனின் நண்பராகவே நடந்து கொண்டார் - "ப$_4$க்தோऽஸி மே ஸக$_2$ா சேதி" (கீதை 4/3) "இஷ்டோऽஸி" (கீதை 18/64). வேதங்களிலும் பகவானை ஜீவனின் தோழனாகவே கூறப்பட்டுள்ளது - "த்$_3$வா ஸுபர்ணா ஸயுஜா ஸக$_2$ாயா ஸமாநம் வ்ருக்ஷம் பரிஷஸ்வஜாதே" (முண்டகம் 3/1/1; ஶ்வேதாஶ்வதரம் 4/6)

எப்போதுமே சேர்ந்து வாழும் தோழமை கொண்ட இரு பறவைகள் (ஜீவாத்மாவும், பரமாத்மாவும்) ஒரே மரத்தின் கண் (உடலைச் சார்ந்து) உறைகின்றன.*

உயர்ந்த மனிதனே தன்னைச் சார்ந்தவரை உயர்த்த முடியும். பிறரைச் சிறுமைப்படுத்துபவன் சிறியவனே யாவான். உண்மையிலேயே உயர்ந்த நிலையிலுள்ளவன் சிறியவனாவதற்குச் சற்றும் தயங்குவதில்லை. பதினெட்டு அக்ஷௌஹிணி அளவு கொண்ட க்ஷத்ரிய சமுதாயத்திற்கு நடுவில் பகவான் குதிரைப் பாகனாக வந்தார். "இரு அணிகளுக்கும் இடையில் தேரை நிறுத்து" என்று ஆணையிட்ட அர்ஜுனனின் சொல்லுக்குக் கீழ்ப்படிந்தார் பகவான். தர்மநந்தனரின் ராஜஸூய யாகத்தில் முதல் மரியாதை பெற்றவர் கண்ணபிரான். ஆனால் அந்த யாகத்திற்கு வருகை தந்த அந்தணர்களின் கால்களைக் கழுவுவதிலும், அவர்கள் உண்ட எச்சிலைத் தூய்மை செய்வதிலும் ஈடுபட்டார் அவர். தாழ்ந்த பணிகளைச் செய்வதில் சிறிதும் வெட்கமடையவில்லை. சிறியோர்களுக்கே தாழ்ந்த வேலைகளைச் செய்வதில் வெட்கமும், அச்சமும், பிறர் என்ன நினைப்பரோ என்னும் தயக்கமும் தோன்றும்.



---

* *ஸுபர்ணாவேதௌ ஸத்₃ருஶௌ ஸக₂ாயௌ*
*யத்₃ருச்ச₂யைதௌ க்ருதநீடௌ₃ ச வ்ருக்ஷே ।*
*(ஸ்ரீமத் பாகவதம் 11/11/6)*

## 3. குருவின் பெருமை

உண்மையில் குருவின் பெருமைகளை முழுவதுமாக உரைக்கும் திறன் பெற்றவர் யாருமிலர். குருவின் பெருமை பகவானைக் காட்டிலும் உயர்ந்தது. ஆகவேதான் சாஸ்த்ரங்களில் குருவிற்கு மிகுதியான பெருமை கூறப்பட்டுள்ளது. ஆனால் அப்பெருமைகள் உண்மையான குருவுக்குத்தான். ஆடம்பரச் சாமியார்களுக்கு அல்ல. இன்று போலி குருமார்கள் பெருகிவிட்டனர். தீயவர் தீயவேடம் புனைந்து வந்தால் இனம் கண்டு கொள்ளலாம். தீயவர் ஸாது வேடத்தில் வந்துவிட்டால் புரிந்துகொண்டு விலகுவது கடினம். ஸீதை கபட வேடத்தில் வந்த ராவணனிடமும், மன்னர் ப்ரதாபபானு போலி குருவிடமும், பரமஞானியும், பக்தருமான ஸ்ரீஆஞ்ஜநேயர் காலநேமியிடமும் ஏமாந்தனர். இன்று சீடர்கள் சாமியார்களிடம் மிகுந்த ஈடுபாடு கொண்டிருப்பதைப் பார்க்கிறோம். ஆனால் அதைப் பெறும் தகுதி அச்சாமியார்களிடம் சிறிதும் காணப்படவில்லை. 'தற்காலத்தில் குருமார்களிடம் எனக்கு மரியாதை ஏற்பட வில்லை; ஆனால் அவர்களுடைய சீடர்களிடமே எனக்கு மரியாதை ஏற்படுகிறது' என்று கீதாப்ரஸ் ஸ்தாபகர் மதிப்பிற்குரிய ஸேட் ஜயதயால் கோயந்தகா அவர்கள் கூறுவது வழக்கம். ஏனெனில் சீடர்களிடம் தத்தம் குருமார்களிடம் காணப்படும் பக்தியும், ஈடுபாடும் மிகவும் போற்றுதற்குரியது.

சாஸ்த்ரங்களில் பெரிதும் பரவலாகக் காணப்படும் குருமஹிமை உண்மையேயாயினும் தற்காலத்தில் ப்ரசாரம் செய்யத்தக்கதன்று. அத்தகைய மஹிமைகளை போலித்துறவியர் தம்முடைய ஆசைகளை நிறைவேற்றிக் கொள்ளச் சாதகமாக்கிக் கொள்கின்றனர். இதற்குக் கலியுக காலமும் அவர்களுக்குத் துணை புரிகின்றது -

"கலிநாத$_4$ர்மமித்ரேண" (பத்மபுராணம். உத்தரகாண்டம் 193/31)

குரு மஹிமைகள் மனத்தில் தாரணை செய்வதற் கானவை; நிலைநிறுத்திக் கொள்வதற்கானவை. குரு ஸ்தானத்தில் அமர்ந்த ஒருவர் குரு மஹிமையைக் கூறுவார்; குருமஹிமை கூறும் நூல்களை ப்ரசாரம் செய்வார் என்றால் என்ன அர்த்தம்? சீடர்களின் எண்ணிக்கையை மிகுதியாக்கித் தன்னிலையை உறுதி செய்து கொள்ள வேண்டும் என்பது தானே பொருள். நான் போலிகளைத்தான் கண்டிக்கிறேன். யாரும் உண்மையான குருமார்களைக் குறை கூறமுடியாது.

சிஷ்யனது கோணத்தில்தான் குருவின் பெருமை களெல்லாம். குருவின் நோக்கில் யாதொரு பெருமையும் கிடையாது. குருவின் கண்ணோட்டம், "உண்மையான, இயல்பான பாரமார்த்திக தத்துவத்தின்பால் சீடனைத் திருப்பிவிட்டேன். அவனது ஸ்வரூபம் யாதென்று அவனுக்கு அறிவுறுத்தினேன். அவ்வளவே" என்பதாம். 'நடப்ப தெல்லாம் அவர்தம் இன்னருளே' என்பதே சீடனின் ம[illegible]ன்மையாகும். சீடனின் குரு பக்தியின் விளைவால் அவனுக்குத் தத்வபோதம் ஏற்பட்டது என மூன்றாமவன் தீர்மானிக்கிறான்.

இறைவனுடன் ஒருவனை இணைப்பவரே உண்மையான குரு; அதுவே அவருக்குப் பெருமை. இப்பணியைச் செய்யாமல் வெறும் பேச்சில் பொழுதைக் கழிப்பவர் குரு ஆகமாட்டார். அவரைக் குறித்த புகழுரைகளும் போலியானவை; அவை பிறரை ஏமாற்றுவதற்கானவை.



# 4. குருவின் கருணை

குரு க்ருபையின் பெருமைகளில் யாதொரு ஐயமும் இல்லை. குரு க்ருபை பற்றி அறநூல்கள் கூறுவது அத்தனையும் உண்மை. பகவானின் கருணையால் ஜீவனுக்கு மனிதப்பிறவி கிடைக்கிறது. குருவின் கருணை யால் அவனுக்கு பகவான் கிடைக்கிறார். குருவைப் பெற்றால் தான் அவர் கருணை செய்வார் என்னும் நம்பிக்கை முழுதும் உண்மையன்று. யாருமே தம்முடைய குழந்தைகளைப் பேணிக் காக்கவே செய்வர். ஆனால் ஸாதுக்களின் க்ருபையோ மிகவும் தனிச்சிறப்பு வாய்ந்தது. பிறர் தமக்கு சீடராகிறாரா? இல்லையா? யார் நம்மிடம் பற்று வைக்கிறார்? யார் பகைமை பாராட்டுகிறார் என்பதையெல்லாம் மெய்யடி யார்கள் சட்டை செய்வதில்லை. அவர்களது பரிவு எக்காலத் திலும் எல்லோருக்கும் சமமாகவே இருக்கிறது. நலிந்தோரிடம் அவர்கள் காட்டும் அருட்பெருங்கருணை ஒன்றாலேயே அவர்கள் கடைத்தேறி விடுவர். ஜகாயி, மதாயி போன்ற மிகக் கொடிய பாபிகளிடமும் ஸ்ரீசைதன்ய மஹாப்ரபு தயை காட்டி அவர்களை உய்வித்தருளினார்.

அடியார் அனைவர் பாலும் கருணை பொழிந்தாலும் பரமாத்மாவை அடைய வேண்டும் என்னும் தணியாத வேட்கையுடையோர் மட்டுமே அதைப் பற்றிக் கொள்கின் றனர். தாகம் உடையவர் நீரை நாடுவதுபோல உய்வு பெறுவதில் ஈடுபாடும், பரமாத்ம தத்வமறிவதில் வேட்கையுமே குரு க்ருபையை அடைவதில் உறுதுணையாய் அமைகின்றன. உண்மையான ஜிக்ஞாஸுவிடம் (முக்தியில் நாட்டமுடையவர்) குருக்ருபை தானே ஏற்பட்டு விடுகிறது. குரு க்ருபை கிடைத்து விட்டால் வேறெதுவும் தேவையில்லை. ஆனால் இத்தகைய குரு மிகவும் அரியவர்.

ஸ்பரிச வேதிக்கல் இரும்பைப் பொன்னாக்கலாம். ஆனால் அந்தப் பொன்னுக்கு இரும்பைப் பொன்னாக்கும்

திறமை கிடையாது. ஆனால் உண்மையான குரு சீடனை இன்னொரு குருவாக்கி விடுவார். இதுவே குருக்ருபையின் தனிச்சிறப்பு. ஆமை நீரில் இருந்துகொண்டே நிலத்தில் இட்ட முட்டையை நினைப்பதாலேயே குஞ்சு பொரித்து விடும். அவ்வாறே குரு என்பவர் "ஸ்மரண தீக்ஷை" என்று மனத்தில் நினைப்பதாலேயே சீடனை ஞானியாக்கும் வல்லமை பெற்றிருக்க வேண்டும். மீன் நீரில் தனது முட்டையைப் பார்ப்பதாலேயே குஞ்சு வெளிவந்துவிடும். அதுபோன்று குரு சீடனைத் தனது பார்வையின் மூலம் உய்விக்கும் முறை 'நயந தீக்ஷை' ஆகும். குரரிப் பறவை வானில் சத்தமிட்டுக் கொண்டு பறக்கும். அந்த ஒலியின் தாக்கத்தால் முட்டையிலிருந்து குஞ்சுகள் வெளிப்படும். இதுபோன்று, குருவின் வாக்கால் ஞானம் பெறுவது 'சப்த தீக்ஷை' ஆகும். மயிற்பேடை முட்டையின் மேலமர்ந்து, குஞ்சு பொறிக்கும். இதுபோன்று குரு தொடுவதால் சீடனை உய்விக்கும்முறை 'ஸ்பர்ச தீக்ஷை'.

பகவானின் நிகரற்ற கருணை காரணமாக மனிதப்பிறவி கிடைக்கிறது. இதன் துணைகொண்டு ஜீவன் ஸ்வர்கமும் போகலாம், நரகமும் போகலாம். இரண்டையும் தவிர முக்தி பெறவும் செய்யலாம். ஆயின் குருவின் கருணையாலோ, அடியாரின் கருணையாலோ ஸ்வர்கமோ, நரகமோ கிடைக்காது; வெறும் முக்தி மட்டும்தான் கிடைக்கும். உண்மையான மஹாபுருஷர்கள் சிஷ்யர்களுக்கு மட்டும்தான் கருணை புரிவர் என்னும் நியதியும் இல்லை. அவரது இயல்பே கருணை புரிவதுதான். சூரிய ஒளி எல்லோருக்கும் சமமாக இருப்பதுபோல அடியார்கள், குரு இவர்களின் கருணையும் இயல்பானது; இயற்கையானது. அவர்களை ஏற்பவர்களை அது வந்தடைகிறது. அவர்கள் கருணையை ஏற்கும் பாத்திரமாக ஆகும் முயற்சியை அனைவரும் மேற்கொள்ள வேண்டும்.

மழை எங்கும் சமமாகப் பெய்தாலும் விதைக்கேற்ற மரமே முளைக்கும். ஸாதுக்கள், பகவான் இவர்களின் கருணை அனைவரிடமும் சமமாக இருந்த போதிலும் ஒருவரது ஈடுபாட்டைப் பொறுத்தே பயன் அமைகிறது.

—✦—✦—

# 5. உபதேச மொழிகளின் பெருமை

குருவாக ஒருவரை வரிப்பதால் மேன்மை பெற இயலாது. அவருடைய மொழிகளை ஏற்றுக் கடைப்பிடிப்ப தாலேயே மேன்மை ஏற்படும். ஏனெனில் குரு ஒலி வடிவானவர்; உடல் வடிவானவர் அல்லர்.

குரு உடலாக முடியாது; உடல் குருவாக முடியாது - "ந மர்த்யபு$_3$த்$_3$த்$_4$யாஸூயேத" (ஸ்ரீமத் பாகவதம் 11/17/27). ஆகவே குரு மரணத்தைக் கடந்தவர். குரு உயிர் துறந்துவிட்டால் சீடன் உய்வு பெறுவதெப்படி?

சாதாரணமாகவே பஞ்சபூதங்களாலான மனித உடல் மிகவும் தாழ்ந்ததாகக் கூறப்படுகிறது. குருவை மனித உடலாகப் பார்ப்பது பெரும் குற்றமாகும். இந்தத் தத்வம் ஏகநாதரின் சரித்திரத்தில் சிறப்பாகக் கூறப்பட்டுள்ளது. சாஸ்த்ர வழிமுறைகளில் முதலில் தீர்த்த யாத்திரை செய்ய வேண்டும். பின்னர் உபாஸனைகள் செய்ய வேண்டும். பின்னரே ஞானம் பெறலாம். ஆனால் ஏகநாதர் முதலில் தத்வஞானம் பெற்றார். பின்னர் உபாஸனை புரிந்தார். அதன் பின்னர் குரு அவரைத் தீர்த்த யாத்திரை செய்து வருமாறு ஆணையிட்டார். அப்போது ஓர் அந்தணர் ஏகநாதரின் குருதேவர் இருந்த இடமான தேவகட் சென்றார். அவரிடம் ஏகநாதரின் வயது முதிர்ந்த பாட்டி, பாட்டனாரைப் பற்றிக் கூறினார். அவர்களைப் பற்றி ஏகநாதர் தம்மிடம் ஏதும் கூறாதது குறித்து வியப்படைந்த அந்த குருநாதர் ஏகநாதர் தீர்த்தயாத்திரை முடிந்து பைடண் (ப்ரதிஷ்டானபுரி) வந்ததும், அவரிடம் கொடுக்குமாறு ஒரு கடிதம் எழுதிக் கொடுத்தார். அவ்வந்தணர் ஏகநாதர் திரும்பி வரும்போது அவரது பாட்டி, பாட்டனாரை அழைத்துக் கொண்டு அவர் தங்கியிருந்த இடம் நோக்கிச் சென்றார். நடுவழியில் அவரைச் சந்தித்து குருதேவரின் கடிதத்தைக் கொடுத்தார். அதைப் பெற்றுக் கொண்ட ஏகநாதர் ஒரு துணியை விரித்து அதன்மீது

அக்கடிதத்தை வைத்தார்; அதை வலம் வந்து வணங்கினார்; பின்னர் அக்கடிதத்தைப் படித்தார். அதில் "ஏகநாத! நீ அங்கேயே இரு" என்று எழுதியிருந்தது. ஏகநாதர் அங்கேயே அமர்ந்து, இல்லம் அமைத்து, ஸத்ஸங்கம் நடத்தினார். அதன்பின் ஒருமுறை கூட தமது குருவை தரிசிக்கச் செல்லவில்லை. ஏகநாதர் உயிர் பிரியும் வரை அங்கேயே இருந்தார்.

ஆராய்ந்து பாருங்கள். குரு என்பவர் உடலா? உபதேசமா? குருதேவர் முக்தி பெற்றதும் ஏகநாதர், 'குரு மரணமடைந்து சீடன் அழுதால் இருவருக்கும் எந்த அளவுக்கு ஞானம்?' என்று கூறினார்.

ஏகநாதரின் குருபக்தி சிறந்தது. அவர் அருளிச் செய்த பாகவதத்தின் ஏகாதச ஸ்கந்தத்தின் விரிவுரையில் ஒவ்வொரு அத்யாயத்தின் தொடக்கத்திலும் குருவை வெகு அருமையாகத் துதி செய்துள்ளார். அவர் தம்முடைய குருவைக் காட்டிலும் அவருடைய மொழிகளுக்கே (ஆணைக்கு) மிகுந்த மதிப்பளித்ததை நாம் கருத்தில் கொள்ள வேண்டும்.

பகவானிடமிருந்து முழுப் பயனையும் பெற நாமஜபம், த்யானம், பணிவிடை, கட்டளைக்குக் கீழ்ப்படிதல், ஸம்பந்தம் ஆகிய ஐந்து ஸாதனைகள் அவசியம். ஆனால் மெய்யடியார்களிடமிருந்து பயன் பெறுவதற்கு பணிவிடை, ஆணைக்குக் கீழ்படிதல், ஸத்ஸங்கம் ஆகிய மூன்று ஸாதனைகள் போதுமானவை.

குரு உடல் அல்லர்; ஆனால் தத்வம் ஆவார். உண்மையான குரு தம்மை வழிபடுமாறு கூற மாட்டார். பகவானையே த்யானித்து வழிபடுமாறு கூறுவார். கீதை, ராமாயணம் போன்ற நூல்களின் வழிநடக்குமாறு கூறுவார்.

தம்முடைய புகைப்படங்களைச் சீடர்களுக்குக் கொடுத்து வழிபடச் செய்வோர் ஏமாற்றுவேலை செய்பவராவர். பகவானது தூய, சிந்மயமான திவ்யமங்கள

விக்ரஹத்திற்கு மானுட சரீரம் இணையாகுமா? எம்பெருமானை வழிபட வேண்டிய இடத்தில் எலும்பாலும், சதையாலும் ஆன மாசு நிறைந்த மனித உடலை வைக்கலாமா? இத்தகைய சடங்குகள் பெருங்குற்றமாகும். அரசனுக்கு மாறாகச் செயல்படுபவன் ராஜத்ரோஹியாவது போல, தனது வழிபாட்டை நடைமுறைப் படுத்துபவன் பகவத் துரோஹியாவான். கீதாப்ரஸ் நிறுவனர் பெருமதிப் பிற்குரிய ஸேட் ஜயதயால் கோயந்தகா அவர்களிடம் ஓர் அன்பர் புகைப்படம் எடுக்க அனுமதி கோரிய போது, அவர் தம் தலையில் ஒரு செருப்பைக் கட்டி அதோடு புகைப்படம் பிடிக்குமாறு கூறினார். புகைப்படம் எடுப்பதையே செருப்பால் அடிப்பதற்கு நிகராகக் கருதிய பெருந்தகையாளர் அவர். புத்தகங்கள் வாயிலாக சுயவிளம்பரம் தேடிக் கொண்டிருந்த ஸாது ஒருவரை சந்தித்த ஸேட்ஜி, "நீங்கள் உங்கள் பெயரையும், உருவத்தையும் அச்சேற்றிப் பிரசாரம் செய்து கொள்கிறீர்களே! இதனால் யாருக்கு லாபம்? உங்களுக்கா, உங்களுடைய சீடர்களுக்கா அல்லது இவ்வுலகுக்கா?" என வினவினார். இக்கேள்விக்கு அந்த ஸாதுவால் விடை கூற இயலவில்லை.



## 6. குருவாகும் தகுதி யாருக்கு?

குரு கோவிந்தனைக் காட்டிலும் உயர்ந்தவர் என்று சாஸ்த்ரங்கள் கூறுகின்றன. ஆனால் சீடனை உய்விக்கும் தகைமை படைத்த குரு ஒருவருக்கே அச்சிறப்புக் கூறப்பட்டுள்ளது.

கு₃ருர்ந ஸ ஸ்யாத்ஸ்வஜனோ ந ஸ ஸ்யாத்
பிதா ந ஸ ஸ்யாஜ்ஜநநீ ந ஸா ஸ்யாத்।
தை₃வம் ந தத்ஸ்யாந்ந பதிஶ்ச ஸ ஸ்யாத்
ந மோசயேத்₃ய: ஸமுபேதம்ருத்யும்॥
*(ஸ்ரீமத் பாகவதம் 5/5/18)*

*"நெருங்கிவரும் மரணத்திலிருந்து காக்க இயலாத ஒருவனுடைய குரு குரு ஆகார்; உற்றார் உற்றார் ஆகார்; தந்தை தந்தை ஆகார்; தாய் தாய் ஆகமாட்டார்; அவனுடைய இஷ்ட தெய்வம் இஷ்ட தெய்வமாகாது; கணவன் கணவனாக மாட்டான்."*

தன்னைச் சேர்ந்த சீடனை உய்விக்க இயலாத ஒருவன் குருவாகக் கூடாது. சீடனை உய்விக்க அவ்விதம் செய்ய முடியாத ஒருவனுக்குப் பாபம் ஏற்படும். சீடனின் துயரைத் தீர்க்காமல் செல்வத்தை மட்டும் கவர்ந்து கொள்ளும் குரு கொடிய நரகில் வீழ்கிறான் என்று ஸ்ரீராமசரித மானஸம் கூறுகிறது. அத்தகைய ஒருவன் முக்திபெறும் பொருட்டு மனித சரீரத்தை அடைந்த ஒருவனை முக்தி பெறுவதிலிருந்து தடுத்தவனாகிறான். போலி குரு அவனுக்கு உய்வுதரும் நிலையிலும் இல்லை; அவன் மேன்மைப் பாதையில் செல்லவும் அனுமதிப்பதில்லை. 'சீடனை ஏற்றுக் கொண்டு அவனுக்கு உய்வு தர இயலாத ஒருவன் அடுத்த பிறவியில் நாயாகிறான். அச்சீடன் அதன்

ரத்தத்தை உறிஞ்சும் ஒட்டுண்ணியாகிறான்' என்று காசியில் வாழ்ந்த ஸ்ரீகரபாத்ரிஜீ ஸ்வாமிகள் சொல்வது வழக்கம்.

மந்த்ரிதே$_3$ாஷஶ்ச ராஜாநம் ஜாயாதே$_3$ாஷ: பதிம் யத$_2$ா ।
தத$_2$ா ப்ராப்நோத்யஸந்தே$_3$ஹம் ஶிஷ்யபாபம் கு$_3$ரும் ப்ரியே ॥
*(குலார்ணவ தந்த்ரம்)*

*"அமைச்சனின் குற்றத்துக்கு அரசன் பொறுப்பு; மனைவி செய்த குற்றங்களுக்கு கணவன் பொறுப்பு; சீடனுடைய பாபங்களுக்கு குருவே பொறுப்பு".*

தா$_3$பயேத் ஸ்வக்ருதம் தே$_3$ாஷம் பத்நீ பாபம் ஸ்வப$_4$ர்தரி ।
தத$_2$ா ஶிஷ்யார்ஜிதம் பாபம் கு$_3$ருமாப்நோதி நிஶ்சிதம் ॥
*(கந்தர்வ தந்த்ரம்)*

*"மனைவி செய்த பாபத்திற்குக் கணவன் பொறுப்பாவது போல் சீடன் சேர்த்துக் கொண்ட பாபங்களுக்கு குருவே பொறுப்பு"*

ஒரு ஞானியின் முற்பிறவியில் நேர்ந்த ஓர் உண்மை நிகழ்ச்சி. அவர் முற்பிறவியில் ஓர் அரசனிடம் அமைச்சராக இருந்தார். முடிவில் அவர் முற்றும் துறந்த துறவியானார். அவரிடம் பலரும் உபதேசம் பெற்று உடன் வசிக்க ஆரம்பித்தனர். அரசனும் அவரது சீடன் ஆனான். குரு காலமானதும் சீடன் (அரசன்) குருஸ்தானத்தில் அமர்ந்து கொண்டான். குரு பதவி கிடைத்ததும் முந்தைய பழக்கம் காரணமாக போகங்களில் ஆழ்ந்து விட்டான். முடிவில் நரகம் புகுந்தான். மேலுலகம் சென்ற குருவும் இதன் காரணமாக பிறவி பெற நேர்ந்தது. மன்னனும் மறுபிறப்பெடுத்தான். அப்போது குரு அவனை நண்பனாகவே ஏற்று, பகவானிடம் ஈடுபடச் செய்து உய்வுக்கு வழிவகுத்தார்.

தற்காலத்தில் குரு என்னும் பெயரில் சீடனை பகவானிடம் ஈடுபடச் செய்யாமல் தம்மிடமே ஈடுபடச்

செய்கின்றனர். இது மிகக் கொடிய அபராதம்* ஆகும். சீடனை பகவானிடம் திருப்பி அவரிடம் ச்ரத்தையும், திடநம்பிக்கை யும் கொள்ளச் செய்பவனே உண்மையான குரு. ஆஞ்ஜநேயர், விபீஷணரைத் தம்மிடம் ஈடுபாடு கொள்ளச் செய்யாமல், பகவானிடம் நம்பிக்கைக் கொள்ளச் செய்தார்.

மஹாபுருஷரான ஸ்வாமி ஸ்ரீ சரணானந்தர் 'பகவானிடத்தில் மஹாவிசுவாசத்தை ஏற்படுத்துவதற்கு பதிலாகச் சீடனிடம் தனது சிறப்பை முன்னிலைப்படுத்தி அதில் ஈடுபாட்டை ஏற்படுத்துபவன், சீடனுக்கு பகவானுடைய தொடர்பை ஏற்படுத்துவதற்குப் பதிலாக, தனது தொடர்பை நிலைப்படுத்துபவனாகிறான். அவன் பெரியதொரு அழிவிற்கு அடிகோலுகிறான்' என்று 'ப்ரபோதனி' என்னும் நூலில் கூறியுள்ளார்.

தனிநபரிடம் ச்ரத்தா-விச்வாஸம் ஏற்படுவதற்கு பதிலாக பகவானிடம் ச்ரத்தா-விச்வாஸம் ஏற்பட்டால் மிகுந்த பயன் பெறலாம். தமக்கே உயர்ந்த இடம் கொடுத்துக் கொண்டு, தம்மை வழிபடச் செய்வோர் வீழ்ச்சிக்கு இட்டுச் செல்பவர் ஆவர். இத்தகையோரிடம் எச்சரிக்கையாக இருக்க வேண்டும்.

பகவானின் அம்சமானதால் மனிதனுக்கு பகவானிடம் எப்பொழுதும் அகலாத நெருங்கிய ஸம்பந்தம் உள்ளது. இது இயற்கையானது; இயல்பானது. ஆனால் குரு என்னும் பெயரில் ஒரு நபரை ஏற்பது செயற்கையானது. இதனால் பந்தமே ஏற்படும். ஏனெனில் ஏற்கெனவே நாம்

---

* *பாபத்திற்கும், அபராதத்திற்கும் வேற்றுமை உள்ளது. பாபத்திற்கு நரகம் முதலிய துன்பங்களை அனுபவிப்பதன் மூலம் நிவர்த்தி ஏற்பட்டு விடுகிறது. ஆனால், அபராதத்தை பொறுத்தமட்டில், அபராதம் செய்தவரிடம் மன்னிப்புக் கேட்டு அவர் மனம் குளிரச் செய்வதாலேயே நிவர்த்தி உண்டாகும். எனவே அபராதம் பாபத்தைக் காட்டிலும் கொடியது.*

ஸம்ஸாரத்தின் செயற்கையான தொடர்பினால் கட்டுண்டுள் ளோம். குருவை அடைந்த அனைவருமே உய்வு பெற்றனர், தத்வ ஞானம் அடைந்தனர் என்றும் கூற இயலாது. குருவை அடைந்தவன், ஸத்ஸங்கத்தில் ஈடுபட்டவன் இருவரையும் சீர் தூக்கிப் பார்த்தால் குருவைப் பெற்றவரிடையே விருப்பு-வெறுப்புகள் மிகுதியாகவும், ஸத்ஸங்கம் அடைந்தவரிடம் அவை குறைவாகவும் காணப்படுகின்றன. குரு மேன்மை செய்வார் என்று நம்பி இருப்பவரின் ஸாதனையில் தாமதம் ஏற்பட்டு விடுகிறது. குருவை அடைந்தவனிடம் தனித்த மாறுதல்களையும் காண்பது அரிதாக உள்ளது.

குருவாக ஆவதும், குருவை அடைவதும் விளையாட்டான விஷயங்கள் அல்ல. மிகவும் கவனமாகச் செய்யத்தக்க உயரிய விஷயங்கள். சீடனை ஏற்றுக் கொண்டால் அவனுக்கு உய்வைத் தருவது குருவின் பொறுப்பு. வெறும் காணிக்கை, வழிபாடுகளைப் பெற்று, பகவானை அடைவிப்பதில்லை எனில் குருவாகி என்ன பயன்? பகவானை அடையச் செய்யும் தகுதியில்லை எனில் குரு ஆவதற்கும் தகுதி இல்லை. அவர்கள் தாமும் சீடர்களுக்கு உய்வுக்கான பாதையைக் காட்டாமல், உண்மையான குருவையும் அடையவிடாமல் செய்து மனிதப் பிறவியைப் பயனற்றுப் போகச் செய்து விடுகிறார்கள். உய்வு என்பது கேள்விக்குறியாகி விடுகிறது. குரு-சிஷ்யன் என்னும் பந்தம் இல்லையெனில் லாபம் மட்டுமே; நஷ்டம் எதுவுமில்லை. ஆனால் சிஷ்யன் என்று ஆகிவிட்டால் உண்மையான குருவின் கட்டளைக்குக் கீழ்ப்படிந்தேயாக வேண்டும். இல்லையெனில் அந்த குருவுக்கு அபராதம் செய்ததாகிவிடும். அதை பகவானாலும் நீக்க இயலாது.

ஶிவக்ரோத$_4$ாத்$_3$ கு$_3$ருஸ்த்ராதா கு$_3$ருக்ரோத$_4$ாச்சி$_2$வோ ந ஹி ।
தஸ்மாத்ஸர்வப்ரயத்நேந கு$_3$ரோராஜ்ஞாம் ந லங்க$_4$யேத் ।।

*(குருகீதா)*

*"சிவபெருமானின் கோபத்திலிருந்தும் ஒருவனை குரு காப்பாற்றிவிடுவார். ஆனால் குருவின் கோபத்திலிருந்து அவனை சிவபெருமானாலும் காக்க இயலாது. ஆகவே எல்லா விதத்திலும் பெருமுயற்சி செய்து, குருவின் ஆணையைச் சிரமேற் கொள்ள வேண்டும்."*

ப்ரம்மதேவரின் கோபத்திலிருந்தும் ஒருவனை குரு காப்பார். ஆனால் அவர் சினம் கொண்டால் உலகில் ஒருவராலும் அவனைக் காப்பாற்ற இயலாது என்று மானஸமும் கூறுகிறது.



# 7. உண்மையான குருவின் அருமை

கு$_3$ரவோ ப$_3$ஹவ: ஸந்தி ஶிஷ்யவித்தாபஹாரகா: ।
தமேகம் து$_3$ர்லப$_4$ம் மந்யே ஶிஷ்யஹ்ருத்தாபஹாரகம் ।।
*(குருகீதா)*

*''சீடனின் பணத்தைக் கவரும் குருமார் பலர் உள்ளனர். ஆனால் சீடனின் இதயத்திலுள்ள தாபத்தைக் களைய வல்ல குரு கிடைப்பது மிகவும் அரிது''.*

உயிரினங்களின் நலத்தையே நாடுவோர் பற்றி கீதையும் கூறுகிறது - ''ஸர்வபூ$_4$தஹிதே ரதா:'' (5/25; 12/4). உண்மையான அடியார்களின் நோக்கம் பிறரது மேன்மையிலேயே இருக்க வேண்டும். பிறரைத் தம்மில் ஈர்ப்பதில் இருக்கக்கூடாது. அவர்கள் யாரையும் தமது அடியார்களாக, சீடனாகச் செய்து கொள்ளக்கூடாது; யாரிடமிருந்தும் எதையும் ஏற்கவும் கூடாது. ஆனால் பிறரை உய்விப்பதே அவர்களது இயல்பாக இருக்க வேண்டும். தம்மை அண்டியவருக்காக மட்டுமல்லாமல் பிராணிகள் அனைத்துக்குமான மேன்மையை மெய்யடியார் நாடுவர். அவர்கள் பகவானிடம் -

ஸர்வே ப$_4$வந்து ஸுகி$_2$ந: ஸர்வே ஸந்து நிராமயா: ।
ஸர்வே ப$_4$த்ராணி பஶ்யந்து மா கஶ்சித்$_3$ து$_3$:க$_2$ப$_4$ாக்$_3$ப$_4$வேத் ।।

என ப்ரார்த்தனை செய்கின்றனர். அவர்கள் போகங்களுக்கு அப்பாற்பட்டவர்கள். அவர்கள் ஸம்ஸார துக்கத்தையும், அதிலிருந்து விடுபடுவதால் வரும் ஆனந்தத்தையும் அறிந்தவராதலால் ஏனையோரும் அத்தகைய சுகத்தைப் பெற வேண்டும் என்று விரும்புகின்றனர்.

தற்காலத்தில் உண்மையான துறவிகளைக் காண்பது அரிது. பல போலித் துறவிகள் தம் சுகத்தைத் தேடி குருவேடம்

போடுகின்றனர். இது ஒரு தொழிலாகவே ஆகிவிட்டது. சீடர்களும் அதற்கேற்றவாறே உள்ளனர். இன்றைய யுகம் போலிகளின் யுகமாக உள்ளது.

ஆடம்பரம், பகட்டு போன்றவற்றில் ஆழ்ந்தவர், ஒழுக்கமற்றவர், வேதமார்கத்திலிருந்து விலகியவர் ஆகியோரே கலியுகத்தில் உயர்ந்த ஸாதுக்களாக மதிக்கப்படுகின்றனர் என்று மானஸம் கூறுகிறது.

துறவினால் உய்வு என்பதும் உண்மையன்று. ஆகவே ஸாதகன் யாருடைய வலையிலும் விழக்கூடாது. யாரையும் குருவாக ஏற்கக்கூடாது. மேன்மை, உய்வு, முக்தி, தத்வஞானம், பரமாத்மப்ராப்தி இவையெல்லாம் குருவின் கட்டுப்பாட்டில் இல்லை. குருவின்றி உய்வில்லை எனில் பகவானின் ஸ்ருஷ்டியில் முதன் முதலில் முக்தி பெற்றவருக்கு யார் குரு? குருவில்லாமல் முக்தியென்றால், ஜகத்குருவான பகவானின் கருணையால் எவரும் தத்வஞானம் பெறமுடியுமே! ஆனால் தற்காலத்திலோ முதலில் சீடனாக ஆகி, மந்த்ரோபதேசம் பெற்று, பிறகே குருவிடம் உபதேசம் பெறலாம் என்னும் பழக்கம் ஏற்பட்டுள்ளது. இதனால் சீடனுக்கு எவ்வித லாபமும் ஏற்படுவதில்லை. போலி குருமார்களைப் புகலாக அடைந்தவர்களுக்கு நல்ல பாவங்களும் ஏற்படுவதில்லை; மேன்மையும் ஏற்படுவதில்லை; உள்ளிருக்கும் மயக்கமும் நீங்குவதில்லை; அவர்கள் வேறிடத்திற்குச் செல்லவும் முடிவதில்லை. என்னைக் கேட்டால், 'ஸத்ஸங்கங்களுக்குச் சென்று, நல்ல விஷயங்களைக் கேட்டு எவ்வளவு பயனடைய முடியுமோ அவ்வளவு பயன் அடை. ஆனால் யாரையும் குருவாக ஏற்காதே' என்றுதான் சொல்வேன்.

மது₄லுப்₃தே₄ா யத₂ா ப்₄ருங்க₃: புஷ்பாத் புஷ்பாந்தரம் வ்ரஜேத் ।
ஜ்ஞாநலுப்₃த₄ஸ்தத₂ா ஶிஷ்யோ கு₃ரோர்கு₃ர்வந்தரம் வ்ரஜேத் ।।

*(குருகீதா)*

*"தேனை விழையும் வண்டு பூவுக்குப் பூ பறந்து செல்வது போல, ஞானத்தை விழையும் சீடன் ஒரு குருவிலிருந்து மற்றொரு குருவை அடைய வேண்டும்"*

நல்ல குருமார்களை அடைந்து, பின்னர் அவர்களிடம் ஈடுபாடு குறைந்துபோய் ஒதுங்கிக் கொண்டவர் பலரை நான் அறிவேன். ஆகவே தனது உய்வை விரும்புவன் யாருடனும் தொடர்பு ஏற்படுத்திக் கொள்ளக் கூடாது. தற்காலத்தில் உண்மையான குரு கிடைப்பது மிகவும் அரிது. மதப்பிணக்குகள் இல்லாதவர் - அத்வைதம், த்வைதம், விசிஷ்டாத்வைதம், த்வைதாத்வைதம் போன்ற கோட்பாட்டுச் சார்புகள் இல்லாதவரே மிக உயர்ந்த ஞானியாக இயலும். எனவே ஸாதகன் எந்த ஒரு தனிநபரையும் சாராமல் நேராக பகவானைப் பற்றிக் கொள்ள வேண்டும். முழுமை பகவானிடமே உள்ளது. நாம் உண்மையான விசுவாஸத்துடன் பகவானை நோக்கிச் சென்றால் அவர் யோகம், ஞானம், பக்தி அனைத்தையுமே தந்தருள்வார்.



## 8. விவேகம் - மனிதனுடனேயே பிறந்த குரு

ஒரு நுட்பமான விஷயம். ஜகத்குருவான பகவான் ஜீவர்கள் தம்மை அடையும் பொருட்டு மனித சரீரத்தைத் தருகிறார். பகவான் அரைகுறையான காரியத்தைச் செய்வது கிடையாது. பகவான் மனித சரீரத்துடன் ஜீவனின் மேன்மைக் கான எல்லா ஸாதன - ஸாமக்ரிகளையும் தந்துள்ளார். அவர் மனிதனுக்கு விவேகவடிவான குருவையும் கொடுத்துள்ளார். அதன் மூலம் அவன் ஸத்-அஸத், கர்த்தவ்யம்-அகர்த்தவ்யம், சரி-தவறு ஆகியவற்றைப் பகுத்தறிய இயலும். தனது விவேகத்தை மதிப்பவனுக்கு வெளியில் குருவைத் தேடத் தேவையில்லை. விவேகத்திற்கு மதிப்பளித்து, அதைப் பயன்படுத்துவதன் மூலம் அது வளர்ந்து தத்வஞானத்தில் பரிணமிக்கிறது. ஸத்ஸங்கத்தில் ஈடுபடுவதே விவேகத்திற்கு மதிப்பளிக்கும் செயல் - "ஸத்ஸங்கமின்றி விவேகம் தோன்றாது" என ஸ்ரீராமசரித மானஸம் மொழிகிறது. உயர்ந்த அடியார்கள் சீடர்களை ஏற்காவிடினும் அவர்களுடைய ஸத்ஸங்கத்தில் ஈடுபடுவது மிகவும் மேன்மை பயக்கும்.

மன்னர் சதுரஸிம்மன் மேவாட் ராஜ பரம்பரையைச் சார்ந்தவர். ஸத்ஸங்கத்திற்குத் தவறாமல் செல்பவர். அவர் ஏதேனும் ஓர் உயர்ந்த விஷயத்தைக் கேட்டால் அதை உடனே செயல்படுத்துவதில் முனைவார். வாழ்நாள் முழுவதும் அந்த நற்பழக்கம் தம்மை விட்டு நீங்காவண்ணம் அதை உறுதிப்படுத்திக் கொள்வார். இதனால் அவர் உயர்ந்த அடியார் ஆகிவிட்டார். பல உயர்ந்த நூல்களை எழுதி மார்வாடி மொழியின் 'வால்மீகி' என்று பெயர் பெற்றார். இதுபோல உங்களுக்குக் கிடைத்த உயர்ந்த விஷயங்களை மனத்தில் இருத்தி அவற்றைக் கடைப்பிடித்து முன்னேறிச் சென்றால், நீங்களும் சிறந்த அடியார் ஆகலாம்.

# 9. உய்வு பெறுவதில் சீடனின் பங்கு

லாப நோக்கத்தோடு புதிய புதிய மடங்கள் நிறுவப் படுகின்றன. பணத்தாசையால் பலர் மடாதிபதிகள் ஆகின் றனர். தொடர்ந்து குரு பீடத்தைப் பற்றும் ஆசையுடன் சீடர் களாவதில் பலர் ஆர்வம் காட்டுகின்றனர். உய்வுப் பாதைக்கும் இவர்களுக்கும் வெகுதூரம். பொதுவாகச் சீடனிடம் உய்வு பெறுவதற்கான வேட்கை தீவிரமாக ஏற்படாதவரை குரு அவனை உய்விக்க இயலாது. சீடனின் உய்வுபெறும் வேட்கை தீவிரமானால் ஒரு குரு அவனைச் சீடனாக ஏற்காமல் போனாலும் அவன் உய்வு பெறுவது உறுதி.

கபீர்தாஸ் எவ்வளவோ வேண்டிக் கொண்டபோதும் ஸ்வாமி ராமானந்தர் அவரைச் சீடராக ஏற்க மறுத்து விட்டார். காசியில் பஞ்ச கங்கா கட்டத்தில் ஒருமுறை கபீர்தாஸ் படுத்துக் கொண்டிருந்தார். அதிகாலையில் நீராடும் பொருட்டு கங்கைக்கு வந்த ஸ்வாமி ராமானந்தர் தெரியாமல் அவரைக் காலால் இடறிவிட்டார். தவற்றை உணர்ந்த ராமானந்தர் ''ராம-ராம'' என்றார். எழுந்து கொண்ட கபீர்தாஸ் அதையே குருதேவர் தமக்களித்த உபதேசமாக ஏற்றுக் கொண்டார். தொடர்ந்து ஸாதனைகளில் ஈடுபட்டார். முடிவில் கபீர்தாஸ் ஸாதுக்களில் சிறந்தவரானார்.

துரோணர் தன்னைச் சீடனாக ஏற்க மறுத்த போதிலும், ஏகலவ்யன் அவரைப் போன்றதொரு சிலையைச் செய்து விற்பயிற்சியில் ஈடுபட்டுச் சிறந்ததொரு வில்லாளி ஆனான் என்பதையும் நாம் அறிவோம். ஆகவே குருவைப் பெற்றால் தான் உய்வு என்பது கிடையாது. நாம் ஒருவரை குருவாகக் கொண்டாலும், கொள்ளாவிட்டாலும் யாருடைய உபதேசத் தால், வழிகாட்டுதலால் நாம் உய்வு பெறுகிறோமோ அவரே உண்மையில் நம்முடைய குரு. அவருக்கு நம்மைப் பற்றித் தெரிந்திருக்க வேண்டும் என்று கூடக் கட்டாயம் இல்லை. தத்தாத்ரேயர் இருபத்து நான்கு குருமார்களைப் பற்றி பாகவதத்தில் கூறியுள்ளார். குருவுக்கு யார் தம்முடைய சிஷ்யன் என்று தெரியக்கூடத் தேவையில்லை.

## 10. பகவானை அடைவிப்பது குருவின் கையில் இல்லை

நாம் அடைய விழையும் பரமாத்மதத்வம் தேச, கால எல்லைகளுக்குட்பட்டதன்று; யாருக்கும் உட்பட்டதும் அன்று. அளவுக்குட்பட்டது பரமாத்மா ஆகாது. அது உயிரினங்களுக்கு என்றுமே கிடைத்துள்ள ஒன்று. (ஆனால் இவ்வுண்மையை யாரும் அறிந்து கொள்ளவில்லை.) அதை அறிந்து கொண்ட மஹாத்மா தாம் யாருக்கும் குரு ஆவதில்லை; காணிக்கை பெறுவதில்லை. ஆனால் பயன் கருதாமல் பிறர் உய்வதற்கு உறுதுணையாகிறார். குரு ஆகாதவர் தத்வத்தைத் தெரிவிக்கும் அளவு குருஸ்தானத்தில் அமர்பவர் தெளிவுபடுத்த இயலாது.

கொடுக்கல் வாங்கலில் ஈடுபடும் ஒரு நபர் குரு ஆக முடியாது. 'முதலில் எனக்குச் சீடனாகிவிடு; பின்னர் நான் உனக்கு இறைவனைக் காண வழி காண்பிக்கிறேன்' என்று பறைசாற்றுபவர் பகவானை விலைக்கு விற்பவராவார். ஒரு பொருளின் உண்மையான மதிப்பு அதன் விலையைக் காட்டிலும் தாழ்ந்தது என்பது நியதி. கடையில் ஒரு கடிகாரத்திற்கு ரூ.100/- கொடுத்து வாங்குகிறோம் என்றால் அதை மொத்தமாகக் கொள்முதல் செய்த கடைக்காரர் அதற்கு ரூ.100/- கொடுத்திருக்க மாட்டார். குரு என்னும் தனி மனிதர் வாயிலாகக் கிடைக்கும் எந்த ஒரு பொருளும் அவரை விட மதிப்பில் குறைந்ததாகவே இருக்க முடியும். விலை மதிப்பற்ற ஒரு பகவத் தத்வத்தைத் தனிமனிதர் மூலம் பெற இயலுமா என்பதைச் சிந்தித்துப் பார்க்க வேண்டும். யாராவது நம்மிடம் சீடனாகுமாறு கூறினால் கைகூப்பி மறுத்து விடவேண்டும். அவ்வாறு கூறுபவர் அரக்கனான காலநேமி என்பதை உணர்ந்து கொள்ள வேண்டும்.

ஸஞ்ஜீவநி பர்வதத்தை எடுத்துவரச் செல்லும் வழியில் ஒரு முனிவராக வேடந்தாங்கிய காலநேமி என்ற அரக்கனை ஆஞ்ஜநேயர் சந்திக்கிறார். தவ வேடத்திலிருந்த அவன் ஆஞ்ஜநேயருக்கு உபதேசிப்பதாகக் கூறுகிறான். உடலைத் தூய்மை செய்து கொள்வதற்காக நீராடச் சென்ற ஆஞ்ஜநேயர் அங்கு அவரால் சாபம் நீங்கிய ஓர் அப்ஸரஸ் வாயிலாக காலநேமியின் கபடத்தைத தெரிந்து கொள்கிறார். அங்கிருந்து திரும்பிய ஆஞ்ஜநேயர் காலநேமியிடம் 'குருதேவரே! முதலில் காணிக்கை வாங்கிக் கொள்ளுங்கள். பின்னர் உபதேசம் பெற்றுக் கொள்கிறேன்' என்று கூறி அவனை ஓங்கி அறைந்து கொன்று விடுகிறார். இவ்வரலாறு ஸ்ரீராமசரித மானஸத்தில் காணப்படுகிறது.






# 11. உய்வுக்கான முக்கிய காரணம் நமது ஈடுபாடு

**உத்$_3$த$_4$ரேத$_3$ாத்மநாத்மாநம் நாத்மாநமவஸாத$_3$யேத் ।**
**ஆத்மைவ ஹ்யாத்மநோ ப$_3$ந்து$_4$ராத்மைவ ரிபுராத்மந: ॥**
*(கீதை 6/5)*

*"தன்னைத் தானே உயர்த்திக் கொள்ள வேண்டும். தானே தாழ்வுக்குக் காரணமாகிவிடக் கூடாது. தானே தனக்குத் தோழன். தானே தனக்குப் பகைவன்" என்று மிகத் தெளிவாக கீதை கூறுகிறது.*

தனது உய்வுக்கும், தாழ்வுக்கும் மனிதன் தானே காரணமாகிறான். வேறு யாருமல்ல. மனித சரீரம் கிடைத்ததன் பொருள் உய்வுக்கான உபகரணங்களும் முழுமையாகக் கொடுக்கப்பட்டுள்ளன என்பதே. எனவே அவன் மேன்மை பெறப் பிறரைச் சார்ந்திருக்கத் தேவையில்லை.

மனிதன் குரு, பகவான் இவர்களை முழுமையாக நம்பும் போதுதான், அவர்களை மனமார அங்கீகரித்து அவர்களிடம் ஈடுபடும்போதுதான் அவர்கள் அவனுக்கு உய்வு தரமுடியும். தன் பசிக்குத் தானேதான் உண்ண வேண்டும் என்பதுபோல தன்னளவில் ஈடுபாடு இல்லையெனில் அடியாரின் உபதேசத்தால் எவ்விதப் பலனும் இருக்காது.

குரு, அடியார், பகவான் இவர்களுக்கு ஒருபொழுதும் தட்டுப்பாடே கிடையாது. மிக உயர்ந்த அடியார்கள், ஆசார்ய புருஷர்கள், குருமார்கள் தோன்றி உள்ளனர். பகவானுடைய அவதாரங்களும் நிகழ்ந்து முடிந்துள்ளன. ஆனால் இதுவரை நாம் உய்வு பெறாததற்குக் காரணம் என்ன? நாம் அவர்களை ஏற்றுக் கொள்ளவில்லை என்பதேயாகும். ஆகவே நம்முடைய

உயர்வுக்கோ, தாழ்வுக்கோ காரணம் நாமேயன்றிப் பிறர் அல்லர் என்பதைப் புரிந்து கொள்ள வேண்டும்.

"ஆத்மநோ கு₃ருராத்மைவ புருஷஸ்ய விஶேஷத:" (ஸ்ரீமத் பாகவதம் 11/7/20) - மனிதன் தனக்குத் தானே குருவாகி உபதேசம் செய்து கொள்ள வேண்டும். தன் குறைகளைக் களைய முற்பட வேண்டும். தனது உள்ளார்ந்த ஈடுபாட்டாலேயே உய்வைத் தேடிக் கொள்ள முடியும். தன்னில் ஆர்வமும், வேட்கையும், ஈடுபாடும் தோன்றா விட்டால் பகவானாலும் நம்மைக் கடைத்தேற்ற இயலாது. அவ்வாறு முடியுமானால் இதுநாள்வரை உய்வடைதிலிருந்து நாம் வஞ்சிக்கப்பட்டுள்ளோம் என்றாகிறது. குரு இல்லை; அடியார்கள் தோன்றவில்லை; பகவான் இல்லை என்னும் நிலை ஒருநாளும் இல்லை. நமது ஈடுபாட்டில் உள்ள குறையே நாம் மேன்மையடையாததற்குக் காரணமாகிறது. உய்வு என்பது குருவின் கட்டுப்பாட்டிலோ, பகவானின் கட்டுப்பாட்டிலோ உள்ள ஒரு பொருள் இல்லையே! அது நம் வசம் தான் உள்ளது. நம்மிடம் ஆன்மிக வேட்கை இல்லாத நிலையில் எல்லா வல்லமையும் படைத்த இறைவனாலேயே நம்மை உய்விக்க இயலாது என்னும் நிலையில் சாதாரண மாந்தரால் நமக்கு உய்வு தரமுடியுமா? உள்ளத்தில் உயர்ந்த ஈடுபாடு இருப்பின் குருவும், மஹானும், பகவானும் கிடைப்பர்; உயர்ந்த நூல்களும் நமக்குத் துணை புரியும்; நாம் ஞானம் பெற்றுவிடுவோம். இவை யாவும் எவ்விதம் கிடைக்கும் என்பதை பகவானே அறிவார். நமது ஈடுபாடு உண்மையானால் பகவான் நம்மைப் போலி குருவிடமிருந்து விடுவித்து உண்மையான உயர்ந்த குருவை அடையச் செய்வார். உண்மையான ஸாதகனுக்கு உயர்ந்த ஸத்ஸங்கம் கிடைத்து விட்டால் அது அவனை உடனே பிடித்துக் கொண்டு விடுகிறது.

நாம் உண்மையாகவே உய்வு பெற விழைந்தால் அதை யாராலும் தடை செய்ய இயலாது. நாம் உண்மையாக விரும்பவில்லை எனில் நம்மை யாராலும் கடைத்தேற்ற

இயலாது. உள்ளார்ந்த எழுச்சியுடன் பகவானிடம் ஈடுபடும் மனிதருக்கு யார் இன்னல் விளைவிக்க முயன்றாலும் அதுவே அவரது மேன்மைக்குக் காரணமாக அமைந்து விடுவதை நான் பலமுறை பார்த்திருக்கிறேன். பிறர் செய்யும் தடை அவருக்கு ஸாதகமாகவே முடிந்துவிடும். முக்திக்கான வேட்கையும் நம்மிடமேதான் தோன்ற வேண்டும். நாம் உளமார பகவானிடம் ஈடுபட்டால் குருமார்களும், ஸாதுக்களும், பகவானும் நமக்குக் கட்டாயம் உதவ முன் வருவர். நமது முயற்சியின்றி குரு உய்வு தந்துவிடுவார் என்பது ஏமாற்றுவேலை.

ஒரு தாயிடம் பாசமும், பரிவும் இருப்பது உண்மைதான். ஆனால் ஒருவன் உண்ண அமர்ந்தால்தானே தாய் உணவு பரிமாற முடியும். அதுபோல உய்வுக்கான எழுச்சி ஒருவனிடம் தோன்றாதவரை கருணைக்கடலான கடவுளாலும் என்ன செய்ய முடியும்? துகிலுரியும் சமயம் த்ரௌபதி அழைத்ததால்தானே பகவான் புடவை சுரந்து அருள்புரிந்தார். குந்திதேவி ஸ்ரீக்ருஷ்ணனிடம், 'கண்ணா! பாண்டவர்களிடம் உனக்குக் கருணை இல்லையா?' என்று வினவினாள். அதற்குக் கண்ணன் 'தர்மர் சூதாடி செல்வம், அரசு என ஒவ்வொன்றாக இழக்கும்போது என்னை நினைவு கூரவில்லையே? நான் என்ன செய்வேன்?' என்று விடை அளித்தார். அதனால்தானே அவர்கள் வனவாசம் செய்து துன்புற நேர்ந்தது.



## 12. பகவானே அனைவருக்கும் குரு

(இவ்வுரையில் பகவானே எல்லோருக்குமான, என்றைக்குமான குரு ஆவார் என்பது சாஸ்த்ரங்களின் துணைகொண்டு விவரிக்கப்படுகிறது.)

பகவானே ஜகத்குரு - "க்ருஷ்ணம் வந்தே$_3$ ஜக$_3$த்$_3$கு$_3$ரும்", "ஜக$_3$த்$_3$கு$_3$ரும் ச ஶாஶ்வதம்" (மானஸம்). அவர் குரு மட்டுமல்லர்; ஆசார்யர்களுக்கெல்லாம் மேலான ஆசார்யர் - "ஸ ஈஶ: பரமோ கு$_3$ரோர்கு$_3$ரு:" (ஸ்ரீமத்பாகவதம் 8/24/48), "த்வமஸ்ய பூஜ்யஶ்ச கு$_3$ருர்க$_3$ரீயாந்" (கீதை 11/43).

மாமன்னர் ஸத்யவ்ரதன் கூறுகிறார் -

அசக்ஷுரந்த$_4$ஸ்ய யத$_2$ாக்$_3$ரணீ: க்ருத-
ஸ்தத$_2$ா ஜநஸ்யாவிது$_3$ஷோऽபு$_3$தே$_4$ா கு$_3$ரு: ।
த்வமர்கத்$_3$ருக் ஸர்வத்$_3$ருஶாம் ஸமீக்ஷணோ
வ்ருதோ கு$_3$ருர்ந: ஸ்வக$_3$திம் பு$_3$பு$_4$த்ஸதாம் ॥
*(பாகவதம் 8/24/50)*

*"ஒரு குருடன் மற்றொரு குருடனை வழிகாட்டச் சொல்வதுபோல் அஞ்ஞானியான ஜீவன் அஞ்ஞானியை குருவாகக் கொள்கிறான். தாங்களோ ஆதவனைப் போல் ஸ்வயம் ப்ரகாசமானவர். புலன்களைத் தத்தம் செயல்களில் தூண்டுபவர். ஆத்ம தத்வத்தை அறிவதில் வேட்கை கொண்ட நாங்கள் தங்களையே குருவாக வரிக்கிறோம்".*

ஶாஸ்தா விஷ்ணுரஶேஷஸ்ய ஜக$_3$தோ யோ ஹ்ருதி$_3$ ஸ்தி$_2$த: ।
தம்ருதே பரமாத்மாநம் தாத க: கேந ஶாஸ்யதே ॥
*(விஷ்ணுபுராணம் 1/17/20)*

*"இதயத்தில் உரைபவரான விஷ்ணுவே உலகனைத்துக்கும் உபதேசம் செய்பவர். தந்தையே! அப்பரமாத்மாவைத் தவிர*

*வேறு யார் யாருக்குக் கற்பிக்க முடியும்!'' என்று ப்ரஹ்லாதஸ்வாமி கூறுகிறார்.*

பகவான் உலகின் குரு; நாமோ உலகினுள் அடங்கியவர். ஆகவே அவர் நமக்கும் சேர்த்தேதான் குரு ஆகிறார். கலியுகத்தில் போலி குருமார்களால் பேராபத்து விளையும். ஆனால் ஜகத்குருவான பகவானால் யாதொரு ஆபத்தும் கிடையாது; லாபம் மட்டுமே. ஆகவே பகவானை குருவாக ஏற்று அவர் அருளிச் செய்த கீதையைக் கற்று அதன்படி வாழ்ந்தால் நிச்சயம் உய்வுதான். அவரவர்க்கு விருப்பமான தெய்வத்தை குருவாகக் கொள்ளலாம்.

ய: கஶ்சநேஶோ ப$_3$லிநோऽந்தகோரக$_3$ாத்
ப்ரசண்ட$_3$வேக$_3$ாத$_3$பி$_4$த$_4$ாவதோ ப்$_4$ருஶம் ।
பீ$_4$தம் ப்ரபந்நம் பரிபாதி யத்$_3$ப$_4$யாந்ம்ருத்யு:
ப்ரத$_4$ாவத்யரணம் தமீமஹி ।।
*(பாகவதம் 8/2/33)*

*''வேகமாக ஓடிவரும் பெருவலிமை படைத்த காலம் என்னும் பாம்பைக் கண்டு பயம்கொண்டு அஞ்சியவனாகத் தம்மைச் சரணடையும் ஒருவனை யார் காக்கிறாரோ, எவரைக் கண்டு மரணமே பயந்தோடுமோ அத்தகைய ஈச்வரனை நான் சரணடைகிறேன்''*

'பகவான் எத்தகையவர்? அவரது திருநாமம் யாது? இதுபற்றி நான் யாதொன்றையும் அறியேன். ஆனால் யார் இறைவனோ அவரையை நான் சரண புகுகின்றேன்' என்ற உட்கருத்தோடுதான் கஜேந்திரன் பகவானைத் துதிக்கிறார். இதேமுறையில் நாம் இறைவனைப் புகல் அடைந்தால் அவர் குருவை நமக்கு அனுப்புவார். இல்லையெனில் தாமே குருவாகி அருள்புரிவார்.

நாம் பகவானின் அம்சம் - ''மமைவாம்ஶோ ஜீவலோகே' (கீதை 15/7). ஆகவே நமக்கு குரு, தாய், தந்தை யாவரும் பகவான்தான். உண்மையில் நமக்கு

குருவுடன் தொடர்பு கொள்ளத் தேவையில்லை. நாம் செய்ய வேண்டுவதெல்லாம் பகவானுடன் தொடர்பு கொள்வது ஒன்றைத்தான். உண்மையான குருவின் பணியும் சீடனுக்கு பகவானுடன் தொடர்பு ஏற்படச் செய்வதே. பகவானுடன் தொடர்பு கொள்ள யாருடைய அறிவுரையும் தேவையில்லை. பகவானுடன் ஜீவனுக்கு நித்யமான, இயல்பான ஸம்பந்தம் உண்டு. நாம் விரும்பாவிடினும் முக்தி நமக்குக் கிடைக்கும்.

அடியார்களும், வேத புராணங்களும் மிக அரிதெனக் கூறும் பரமபதமும், கைவல்யமும் இராமபிரானை வழிபடுவதால் வெகு எளிதில் கட்டாயம் கிடைத்து விடுகிறது என்று ஸ்ரீரமசரித மானஸம் கூறுகிறது. எனவே கீதையில் பகவான் -

மந்மநா ப$_4$வ மத்$_3$ப$_4$க்தோ மத்$_3$யாஜீ மாம் நமஸ்குரு ।

*(கீதை 9/34, 18/65)*

*"நீ என்னுடைய பக்தனாக இரு. என்னிடமே மனத்தைச் செலுத்து. என்னையே பூஜை செய். என்னையே வணங்கு" என்றும்,*

ஸர்வத$_4$ர்மாந்பரித்யஜ்ய மாமேகம் ஶரணம் வ்ரஜ ।

*(கீதை 18/66)*

*"எல்லா தர்மங்களையும் விட்டுவிட்டு நீ என்னை மட்டும் சரணடை" என்றும், வேறொரு குருவை நாடாமல் தம்மையே சரணடையுமாறு கூறுகிறார்.*



## 13. ஜகத்குருவான பகவானின் பெருங்கருணை

பகவான் எல்லையற்ற எண்ணற்ற கல்யாண குணங்களைக் கொண்டவர். சாஸ்த்ரங்களும், அடியார்களும் அவற்றை இதுகாறும் வர்ணித்த போதிலும் அதில் முடிவு காண இயலவில்லை. ''தமது திருநாமத்தின் பெருஞ்சிறப்பை இராமபிரானாலும் விண்டுரைக்க இயலாது'' என்று கோஸ்வாமி துளஸீதாஸர் கூறுகிறார். தமது பேராற்றலின் மாண்பை எம்பெருமானும் அறியார் என்றே அடியார்களும் கூறி உள்ளனர்.

இத்தகைய அனந்த கல்யாண குணபூர்ணரான பகவானிடம் குறைந்தது மூன்று குணங்கள் முக்யத்வம் வாய்ந்தவை - எல்லாமறிந்த தன்மை, எல்லாம் வல்ல தன்மை, எல்லோரிடமும் தோழமை உணர்வு. இதன் உட்கருத்து - அறிவில் அவருக்கு நிகரானவர் யாருமில்லை. அவரை நிகர்த்த திறமை யாருக்கும் கிடையாது. கருணையில் அவருக்கு நிகரானவர் யாரும் கிடையாது. இத்தகைய பகவான் இருக்கும்போது நாம் இன்னலுறுகிறோம், முக்தி கிடைக்கவில்லை எனில் ஒரு சாமானிய மனிதன் குருவாக வந்து நமக்கு முக்தி கொடுத்துவிட முடியுமா? குரு பகவானைக் காட்டிலும் எல்லாமறிந்தவரா? நமக்குள் உய்வுக்கான வேட்கை கிளர்ந்தெழாதவரையில் பகவானாலும் நமக்கு உய்வளிக்க முடியாத நிலையில் குருவால் என்ன செய்ய இயலும்?

ஒருவன் ஒரு குருவிடமோ, மற்ற அடியார்களிடமோ ஏதேனும் ஒரு தனிச்சிறப்பைக் காண நேர்ந்தால் அதுவும் பகவானிடமிருந்து பிறந்ததுதான். எங்கெல்லாம் தனிச் சிறப்புகள் காணப்படுகின்றனவோ அவையனைத்தும் பகவானுடையயே ஆகும்.

**யத்$_3$யத்$_3$விபூ$_4$திமத்ஸத்த்வம் ஶ்ரீமதூ$_3$ர்ஜிதமேவ வா ।**
**தத்ததே$_3$வாவக$_3$ச்ச$_2$ த்வம் மம தேஜோऽம்ஶஸம்ப$_4$வம் ॥**
***(கீதை 10/41)***

*"வளமும், எழிலும், வலிமையும் பொருந்திய உயிரினங்களோ, பொருட்களோ எவையாயினும் அவையனைத்தும் எனது பொலிவின் (யோகம் அல்லது திறமையின்) அம்சத்தில் தோன்றியவையே என உணர்வாயாக" என்று கண்ணபிரான் பார்த்தனிடம் கூறியுள்ளார்.*

பகவானிடம் பகைமை பாராட்டும் ராக்ஷஸரும் அவரிடமிருந்தே வலிமை பெறுகின்றனர் என்று ஸ்ரீராமசரித மானஸம் கூறுகிறது. இந்நிலையில் பகவானை வழிபடுவோருக்கு அவரிடமிருந்து வலிமை கிடைக்காதா என்ன? பகவானிடம் ஈடுபட்டு விட்டால் கோடிப் பிறவிகளின் பாபங்கள் நசித்து விடுகின்றன என்பதை உணர்ந்து கொள்ளாவிட்டால் பாபங்களை நீக்குவது எப்படி? பகவான் தம்மைப் பகைப்போருக்கும், வழிபடுவோருக்கும், தம்மை அசட்டை செய்பவருக்கும் ஒரே சீராகவே வலிமை நல்குகிறார். பகவானால் படைக்கப்பட்ட நிலம் உலகில் உள்ள அனைவருக்கும் ஒருங்கே இடமளிக்கிறது. அவரால் படைக்கப்பட்ட உணவுப் பொருட்களும் ஒரே சீராக அனைவரது பசியையும் தீர்க்கிறது. நீரும், காற்றும் கூட அனைவருக்கும் ஒரே மாதிரிதான் பயனளிக்கிறது. வீட்டினுள் சிறிய மின்விளக்கு எரிந்தாலும் அதற்குரிய கட்டணம் செலுத்த வேண்டியுள்ளது. பகவானால் படைக்கப்பட்ட ஆதவனோ, நிலவோ எல்லோருக்கும் சமமாக ஒளி கொடுக்கிறதேயன்றி யாரிடமிருந்தும் கட்டணம் வசூலிப்பதில்லை. அவரது படைப்பே இந்த அளவு பரந்தமனம் படைத்ததானால் அவர் எவ்வளவு தயாள குணம் உள்ளவராக இருப்பார்?

கதை ஒன்று உண்டு: ஏகாதசி வ்ரதமிருந்த பக்தர் ஒருவர் துவாதசி பாரணைக்காக அலைந்து திரிந்து முதியவர்

ஒருவரை அழைத்து வந்தார். உணவு அருந்துவதற்காக அமர்ந்த அவர் பகவானை த்யானிக்காமல் உடனே சாப்பிடத் தொடங்கிவிட்டார். அந்த பக்தர் முதியவரிடம் "தாங்கள் சிறிது நேரம்கூட இறைவனைச் சிந்திக்காமல் உணவருந்தத் தொடங்கிவிட்டீர்களே! இது முறையா?" என வினவினார். அதற்கு அப்பெரியவர், "கடவுளா? அவர் யார்? நீ அறிவற்றவனாக இருக்கிறாயே" என்று அசட்டையாகப் பதிலளித்தார். இதைக் கேட்ட அந்த பக்தருக்குக் கோபம் ஏற்பட்டது. அம்முதியவருக்கு எதிரிலிருந்த இலையைச் சட்டென்று இழுத்து, "இறைவனின் இடத்தில் இருந்து கொண்டு நான் உமக்கு உணவளிக்கிறேன். என்னிடமே நாத்திக வாதம் பேசுகிறீர்களே?" எனச் சினத்துடன் கூறினார். அப்போது வானில் ஓர் அசரீரி எழும்பியது - "இவன் முதுமை பெறும் வரையிலும் என்னைப் பழிப்பதை நிறுத்தவில்லை. நானும் இவனுக்கு உணவளிப்பதை நிறுத்தவில்லை. நீ இவனுக்கு ஒருவேளை உணவிடுவதற்கு யோசிக்கிறாயே. நான் உணவளிக்கவில்லை எனில் இவனால் இதுநாள் வரை உயிர் வாழ்ந்திருக்க முடியுமா?" என்று. இதனால் மனத்தெளிவுபெற்ற பக்தர் அந்த முதியவருக்கு அன்புடன் அன்னமிட்டு வழியனுப்பினார்.

இத்தகைய பேரருளாளரான பகவான் இருக்கையில் குரு என்னும் ஒரு தனிமனிதர் நமக்கு சுகமளிப்பார்; உய்வளிப்பார் என்பது வெறும் ஏமாற்றுவேலை. நாம் உய்வு பெறுவதற்கு நம்மை நாமே ஆயத்தப்படுத்திக் கொள்ள வேண்டும். ஆம். அது ஒன்றே போதுமானது.

கருணையில் உயர்ந்தவரான கடவுள் ஜீவகோடிகளின் உயிர் வாழ்க்கைக்குத் தேவையானவற்றிற்கு ஏற்பாடு செய்து வருவதை நாம் கண்கூடாகக் காண்கிறோம். அவர் ஜீவர்களின் உய்வுக்கும் ஏற்பாடு செய்ய மாட்டாரா என்ன? எனவே நாம் உளமார உய்வில் நாட்டம் கொண்டு முன்னேற வேண்டும். "ப்ரபுவே! நான் கடைத்தேற வேண்டும். உய்வு என்பது என்ன? அதை அடைய என்ன செய்ய வேண்டும் என்பதே

எனக்குத் தெரியாது. ஆனால் நான் பேரின்பத்தைப் பெற்றாக வேண்டும். என்ன செய்வேன்?" என்று பகவானிடம் உளமார இடையறாமல் ப்ரார்த்திக்க வேண்டும். பகவான் உண்மை யான கோரிக்கைகளுக்குக் கட்டாயம் செவிமடுக்கிறார். நமது உய்வில் நமக்குள்ள அக்கறையைக் காட்டிலும் பகவானுக்கும், அவருடைய அடியார்களுக்கும் மிகுதியான அக்கறை உள்ளது. அடியார்களின் மனத்தில் அனைவரும் உய்வு பெற வேண்டும் என்னும் எல்லையற்ற பெருங் கருணை குடி கொண்டுள்ளது. முக்திக்கு ஏங்கும் ஸாதகனுக்கு உதவ ஆண்டவன், அடியார்கள் ஆகிய அனைவருக்குமே ஆர்வம் உள்ளது.

ஆகவே கடைத்தேறும் ஆர்வங்கொண்டோர் யாராயினும் அவருக்கு பகவான் உய்வளிக்கிறார்.

சிவபெருமான், "உமா தேவியே! ஸ்ரீராமரைப் போன்ற இதமானவர் வேறு எவரும் - குரு, மாதா, பிதா, உறவினர் - ஆகியோருக்கு மட்டுமின்றி, சுரர்களோ, நரர்களோ, முனிவர்களோ எவராயினும் அவர் தன்னலமின்றி அன்பு செலுத்துகிறார்" என்று கூறுவதாக ஸ்ரீராமசரிதமானஸம் கூறுகிறது.



## 14. குரு குறித்த வினா - விடை

ஸ்ரீராமசரிதமானஸத்தில் குருவின்றி உய்வு ஏற்பட முடியாது என்று கூறியுள்ளது. மேலும் போலி குருவால் உய்வு ஏற்படாது என்றும் கூறுகிறது. எவருடைய வார்த்தைகளை ஏற்று நாம் உய்வடைகிறோமோ அவரை நாம் குருவாக ஏற்காவிடினும் அவர் குரு ஆகிறார். எனவே உத்தம குருவின் சீடனாக ஆவது நன்மை தரும்.

இன்றைய உலகில் போலி குருக்கள் தோன்றிச் சீடர்களை ஏற்படுத்திக் கொண்டு அவர்களை உய்விக்காமல் வழிதவறும்படிச் செய்கின்றனர்.

**கேள்வி :** குருவின்றி உய்வில்லை என்று சாஸ்த்ரங்கள் கூறுகின்றனவே! ஆகவே உய்வு பெற குரு கட்டாயம் தேவை என்று தானே முடிவாகிறது.

**பதில் :** நல்லது - தீயதைப் பகுத்தறியும் விவேகம் எல்லோரிடமும் உள்ளது. பகவந்நாமத்தைச் சொல்லுதல், அவரை த்யானித்தல், பிறருக்குத் துன்பம் அளிக்காதிருத்தல் ஆகிய விஷயங்களையும் அனைவரும் அறிவர். அவ்விஷயங்களின் ஞானத்தை எவரிடமிருந்து பெற்றனரோ அவரே குரு ஆவார். குருவை அடைந்த பின்னர் அவரது வார்த்தைக்குக் கட்டுப்படாவிடில் அவன் குருவற்றவன் ஆகிறான். உண்மையில் ஜீவந்முக்தரான, தத்வமறிந்த, மஹாபக்தர்களான மஹான்கள் உய்வுக்கான வழியைக் கூறுவரே தவிர எவரையும் சீடராக ஏற்கமாட்டார்கள். அவர்களை குருவாக ஏற்காவிடினும் அவர்கள் கூற்றை ஏற்பதால் லாபம் உண்டாகும், ஏற்காவிடில் பாபம் ஏற்படாது. ஆனால் குருவாக ஏற்று அவர்களின் வாக்கைக் கடைப்பிடிக்காவிடில் குற்றம் உண்டாகும்.

கேள்வி : குருவிடமிருந்து மந்த்ரம் பெற்றால் அம்மந்திரத்திற்கு சக்தி உண்டாகிறது' என்று கூறப்படுகிறதே?

பதில் : மந்த்ரம் கொடுப்பவரிடம் சக்தி இருந்தால் அவர் கொடுக்கும் மந்த்ரத்திலும் சக்தி இருக்கும். மஹான்களின் அநுபவத்தில் தான் சக்தியே தவிர வெறும் வார்த்தைகளில் அன்று.

அவரவர் ச்ரத்தை, விச்வாஸம், ருசி, , தகுதி இவற்றிற்கேற்ப ஸாதனை செய்தாலே தத்வப்ராப்தி ஏற்படும். இயல்பாகச் செய்யப்படும் உபாஸனையே உண்மையானது. வற்புறுத்திச் செய்யப்படுபவை நலம் தராது. இன்றைய காலத்தில் சிலர் 'குரு க்ருஷ்ண மந்த்ரத்தைக் கொடுத்தார். எனது மனம் ராமநாமத்தில் ஈடுபடுகிறது. என்ன செய்வது?'' என்று கேட்கின்றனர். இவ்விஷயத்தில் என்னைக் கேட்டால் குரு கொடுத்த மந்த்ரத்தை ஓரிரு மாலை ஜபித்துவிட்டு மற்றைய நேரங்களில் தமக்கு ருசிக்கும் மந்த்ரத்தை ஜபிக்கலாம் என்று கூறுவேன். இயல்பாக ருசி உள்ள உபாஸனையே ஸித்தி அளிக்கும். தமது இஷ்டமந்த்ரத்தில் ச்ரத்தை ஏற்படின் அதில் இயல்பான சக்தி உண்டாகும். அகஸ்த்யர், விச்வாமித்ரர் போன்ற மாபெரும் முனிவர்களிடம் இருந்த ஆற்றல் அவர்களது தவத்தினால் ஏற்பட்டதேயன்றி குரு மந்த்ரத்தால் அன்று. பகவானின் சக்தி எங்கும், எப்போதும், எல்லோருக்காகவும் உள்ளது. 'விரும்புவர் 'அதை அடையலாம்.

கேள்வி : குரு இன்றிக் குண்டலினியை எழுப்புவது எவ்வாறு?

பதில் : குண்டலினியை எழுப்புவதன் மூலம் பகவானை அடைய முடியாது; மேன்மையை அடைய முடியாது. தூங்குவதை எழுப்புவதன் மூலம் முக்தி

கிடைக்குமா என்ன? குண்டலினி சரீரத்தில் உள்ளதே தவிர ஸ்வரூபத்தில் இல்லை. சரீரத்தை விட்டுத் தனித்திருப்பதால் தான் - மேலெழும்பினால்தான் உய்வு ஏற்படும்.

**கேள்வி** : பலருக்கு குருவினால் குண்டலினி எழும்புதல் முதலிய அலௌகிக அனுபவங்கள் ஏற்படுகின்றனவே? அவை என்ன?

**பதில்** : அது வெறும் தோற்றமே தவிர, உண்மையில் உய்வுதர வல்லதன்று. சரீர சம்பந்தம் விட்டபிறகே குண்டலினி மேலே எழும்ப முடியும்.

**கேள்வி** : குருவிடமிருந்து ஜபமாலை பெற்ற பிறகு அதில் ச்ரத்தை இல்லாவிடில் அவரிடம் அம்மாலையைத் திருப்பித் தந்துவிடலாமா?

**பதில்** : இச்செயலை நான் ஏற்க மாட்டேன். தினமும் குரு மந்த்ரத்தை ஒரு மாலை ஜபித்துவிட்டு பிற நேரங்களில் இஷ்டமந்த்ரத்தை ஜபிக்கலாம். ஸத்ஸங்கம், ஸ்வாத்யாயம் செய்யலாம்.

**கேள்வி** : குருவாக ஏற்றவரிடம், ச்ரத்தை ஏற்படவில்லை எனில் அவரை விட்டுவிட்டால் பாபம் இல்லையா?

**பதில்** : குருவிடம் ச்ரத்தை ஏற்படவில்லை எனில் குருவின் தொடர்பு விட்டதென்றே பொருளாகிறது. ஆனால் அதன்பின் ஒருவருடன் குரு என்னும் மதிப்புடன் இணக்கம் கொள்ளவும் வேண்டாம். அவரைப் பழிக்கவும் வேண்டாம். போலி குருவைத் துறந்து விடலாம் என்றே சாஸ்த்ரங்கள் கூறுகின்றன -

**கு$_3$ரோரப்யவலிப்தஸ்ய கார்யாகார்யமஜாநத: ।**
**உத்பத$_2$ப்ரதிபந்நஸ்ய பரித்யாகே$_3$ா விதீ$_4$யதே ॥**

*(மஹாபாரதம், உத்யோக. 178/48)*

*"குரு செருக்கினால் விவேகமிழந்து, தகாத வழியில் சென்றால் அவரைத் துறந்துவிடலாம்."*

ஜ்ஞாநஹீநோ கு$_3$ருஸ்த்யாஜ்யோ மித்$_2$யாவாதீ$_3$ விகல்பக: ।
ஸ்வவிஶ்ராந்திம் ந ஜாநாதி பரஶாந்திம் கரோதி கிம் ।।
*(ஸித்தஸித்தாந்த ஸங்க்ரஹம். குருகீதா)*

*"ஞானமற்ற போலியான குருவை த்யாகம் செய்யலாம். தானே சக்தி பெறாதவர் பிறருக்கு எவ்வாறு சாந்தி அளிக்க இயலும்?"*

பதிதா கு$_3$ரவஸ்த்யாஜ்யா மாதா ச ந கத$_2$ஞ்சந ।
க$_3$ர்ப$_4$த$_4$ாரணபோஷாப்$_4$யாம் தேந மாதா க$_3$ரீயஸீ ।।
*(ஸ்கந்த புராணம் மா.கௌ. 6/7,*
*மத்ஸ்ய புராணம் 227/150)*

*"பதித குருவை த்யாகம் செய்யலாம்; ஆனால் கர்பத்தில் போற்றி வளர்த்த தாயை த்யாகம் செய்யலாகாது. மாதா குருவை விட உயர்ந்தவர்."*

கேள்வி : பெண்கள் எவரையாவது குருவாக ஏற்கலாமா?

பதில் : ஒரு பெண்ணுக்கு அவளுடைய கணவனே குரு என சாஸ்த்ரங்கள் கூறுகின்றன. எனவே பிறரை குருவாக வரிக்கத் தேவையில்லை -

கு$_3$ருரக்$_3$நிர்த்$_3$விஜாதீநாம் வர்ணாநாம் ப்$_3$ராஹ்மணோ கு$_3$ரு: ।
பதிரேவ கு$_3$ரு: ஸ்த்ரீணாம் ஸர்வஸ்யாऽப்$_4$யாக$_3$தோ கு$_3$ரு: ।।
*(பத்மபுராணம் 51/51,*
*ப்ரம்மபுராணம் 80/47)*

*"அக்னி இருபிறப்பான குரு, அந்தணன் நான்கு வர்ணங்களுக்கும் குரு, கணவனே ஒரு பெண்ணுக்குக் குரு. விருந்தாளி எல்லோருக்கும் குரு"*

வைவாஹிகோ விதி$_4$: ஸ்த்ரீணாம் ஸம்ஸ்காரோ வைதி$_3$க: ஸ்ம்ருத: ।
பதிஸேவா கு$_3$ரௌ வாஸோ க்$_3$ருஹார்தே$_2$ऽக்$_3$நிபரிக்ரியா ॥
*(மனுஸ்ம்ருதி 2/67)*

*"விவாஹ விதியை அனுசரிப்பதே பெண்டிருக்கு வைதிக ஸம்ஸ்காரமாகும். பதிஸேவையே குருகுல வாசமாகும். வீட்டுப் பணிகளே அக்னிஹோத்ரமாகும்."*

பெண்மணிகள் தத்தம் கணவன்மாரை அனுசரிப்பதே போதுமானது. அவர்கள் வேறெந்த ஸாதுக்களின் வலையிலும் விழவேண்டாம் என நான் வேண்டிக் கொள்கிறேன். இந்தக் காலத்தில் ஸ்த்ரீகளுக்காக குரு ஆவது மிகவும் தீங்கை விளைவிக்கும். தீக்ஷை கொடுக்கும் சமயத்தில் குரு சீடனைத் தொட வேண்டி இருக்கும். ஸாதுக்கள் பெண்களைத் தொடக்கூடாது. சாஸ்த்ரங்களில் கூறப்பட்ட விஷயம் -

மாத்ரா ஸ்வஸ்ரா து$_3$ஹித்ரா வா ந விவிக்தாஸநோ ப$_4$வேத்
ப$_3$லவாநிந்த்$_3$ரியக்$_3$ராமோ வித்$_3$வாம்ஸமபி கர்ஷதி ॥
*(மநு. 2/215)*

*"மனிதன் தன்னுடைய அன்னை, சகோதரி அல்லது மகள் இவர்களுடன் கூட ஒருபோதும் தனிமையில் இருக்கக் கூடாது. ஏனெனில் வலிமை வாய்ந்த புலன்கள் வித்வானைக் கூடத் தம்மிடம் இழுக்கும் சக்தி வாய்ந்தவை."*

ஸங்க$_3$ம் ந குர்யாத்ப்ரமத$_3$ாஸு ஜாது
யோக$_3$ஸ்ய பாரம் பரமாருருக்ஷு: ।
மத்ஸேவயா ப்ரதிலப்$_3$த$_4$ாத்மலாபே$_4$ா
வத$_3$ந்தி யா நிரயத்$_3$வாரமஸ்ய ॥
*(ஸ்ரீமத் பாகவதம். 3/31/39)*

*"யோகம் என்னும் பரமபதத்தை அடைய விரும்புபவரும், எனது தொண்டின் ப்ரபாவத்தின் மூலம் ஆத்மா, அநாத்மா என்னும் விவேகத்தை அடைந்தவரும் பெண்களுடன்*

*தொடர்பு கொள்ளலாகாது. ஏனெனில் பெண்டிரின் தொடர்பு நரகத்தின் வாயில் எனக் கூறப்பட்டுள்ளது.''*

விஶ்வாமித்ரபராஶரப்ர$_4$ப்ருதயோ வாதாம்பு$_3$பணாா்ஶநா-
ஸ்தே௨பி ஸ்த்ரீமுக$_2$பங்கஜம் ஸுலலிதம் த்$_3$ருஷ்ட்வைவ மோஹம் க$_3$தா: ।
ஶால்யந்நம் ஸக்$_4$ருதம் பயோத$_3$தி$_4$யுதம் பு$_4$ஞ்ஜந்தி யே மாநவா-
ஸ்தேஷாமிந்த்$_3$ரியநிக்$_3$ரஹோ யதி$_3$ ப$_4$வேத்$_3$விந்த்$_4$யஸ்தரேத்ஸாக$_3$ரே ।।
*(ராஜா பர்த்ருஹரியின் வைராக்ய சதகம்)*

*''காற்று, நீர், சருகு இவற்றை உண்டு வாழ்ந்த விச்வாமித்ரர், பராசரர் போன்ற ரிஷிகள் கூடப் பெண்களை நோக்கியதால் மோஹம் அடைந்தனர். அவ்வாறிருக்க நல்ல விருந்துண்போர் புலன்களை அடக்குவது என்பது விந்தியமலையைக் கடலில் மிதக்கச் செய்வதற்கு ஒப்பாகும்.''*

கேள்வி : ஜீவந்முக்தர்கள் போகத்தை அனுபவித்தாலும் அவர்களுக்குப் பாபம் நேர்வதில்லை என்பது உண்மையா?

பதில் : அது சரியன்று. ஜீவந்முக்தர்கள் போகத்தை அனுபவிப்பர் என்பது நடவாத செயல். போகத்தை அவர்கள் ஸாதனைக் காலத்திலேயே துறந்து விடுகின்றனர். போலி சாமியார்கள் மட்டுமே இவ்வாறு தங்கள் சுயநலம் கருதிக் கூறிவருகின்றனர். பொய்யொழுக்கம், பகட்டு ஆகியவற்றுடன் வேதமார்கத்திலிருந்து விலகி, எல்லாம் ஒன்றே என்று கூறிக் கொண்டு பெண்ணாசை, கபடம், மோசடி போன்றவற்றில் ஈடுபடும் போலிச் சாமியார்களை மானஸம் இகழ்ந்துரைக்கிறது.

பு$_3$த்$_3$த$_4$ாத்$_3$வைதஸதத்த்வஸ்ய யதே$_2$ஷ்டாசரணம் யதி$_3$।
ஶுநாம் தத்வத்$_3$ருஶாம் சைவ கோ பே$_4$தே$_3$௨ஶுசி ப$_4$க்ஷணே ।।

*''அத்வைத தத்வ ஞானம் அடைந்தபிறகும் தன்மனம் போனபோக்கின்படி நடந்தால், தூய்மையற்றவற்றை உண்ணும் தத்வஞானிக்கும், நாய்க்கும் பேதம் ஏதுமில்லை.''*

யஸ்து ப்ரவ்ரஜிதோ பூ$_4$த்வா புந: ஸேவேத மைது$_2$நம் ।
ஷஷ்டிவர்ஷஸஹஸ்ராணி விஷ்ட$_2$யாம் ஜாயதே க்ருமி: ॥
*(ஸ்கந்தபுராணம் காசி.பூ.40/107)*

*"ஸன்யாஸம் அடைந்த பிறகும் பெண்களோடு தொடர்பு கொள்பவர்கள் அறுபதாயிரம் வருடம் மலத்தில் உள்ள புழுவாக இருப்பர்"*

போகநுகர்வில் ஏற்படும் நாட்டத்திற்குக் காரணம் காமனைகளே. காமனைகள் முற்றிலுமாக அழிந்த பின்னரே ஜீவந்முக்தி ஏற்படுகிறது. ஒரு உண்மையான ஸாதகன் கூடக் காமனைகளைத் தன் ஸாதனையில் முதற்கட்டத்திலேயே அழித்து விடுகிறான். இந்நிலையில் ஜீவந்முக்தர்கள் போகநுகர்வில் ஈடுபட்டாலும் அவர்களுக்குப் பாபம் ஏற்படுவதில்லை என்று கூறுவது முற்றிலும்பொருளற்றதே. ஜீவந்முக்தர்கள் போகத்தை அனுபவிப்பது குற்றமாகாது என்று கூறப்பட்டாலும் அது அவர்கள்தம் பெருமையை மிகைப்படுத்துவதேயன்றிப் பொதுவிதியன்று."

கேள்வி : குருவைப் பின்பற்றுவதால் சக்திபாதம்* ஏற்படும் வாய்ப்புள்ளதாகக் கேள்விப்படுகிறோமே! அத்தகைய உயரிய மேன்மைக்காக குருமார்களை நாடுவதில் தவறென்ன?

பதில் : சக்திபாதம் என்பது விளையாட்டன்று. தற்காலத்தில் சக்திபாத நிகழ்வுகள் கேட்பதற்கே அரிதாக உள்ளன. ஞானி ஒருவர் இருந்தார். தனக்கு சக்திபாதம்

---

*திரிகரண சுத்தியுடன் ஒரு உத்தம குருவைப் பின்பற்றி வழிபடும் உத்தம சிஷ்யனுக்கு வேறெந்த ஒரு ஸாதனையின் துணையுமின்றி ஆன்மிக அனுபவங்கள் தானே ஏற்படுவதுண்டு. அதுவே சக்திபாதம் எனப்படுகிறது.*

ஏற்படவேண்டும் என்று ஒருவன் அவரை விடாமல் வற்புறுத்தியவாறு இருந்தான். அது ஒரு சாமானியமான விஷயமில்லை; அதைத் தாங்குவதற்கு அளவற்ற ஆற்றல் வேண்டும் என்று அந்த ஞானியும் அவனை மிகவும் எச்சரித்தார். அவன் அதை ஏற்கவில்லை. முதலில் அவர் அவன் மீது சக்திபாதம் செய்தார். அதைத் தாங்க இயலாமல் அவன் அலறத் தொடங்கினான். உண்மை இதுதான். சக்திபாதம் செய்பவரும் சாமானிய மனிதராக இருக்கமாட்டார். அதை ஏற்பவரும் ஒரு சாமானிய மனிதராக இருக்க முடியாது.

கேள்வி : மதமாற்றத்தைத் தடுப்பதற்காக மக்களைச் சீடர்களாக்கிக் கொள்வதில் தவறென்ன?

பதில் : இது ஒரு சாக்குப்போக்கு. பிற மதங்களில் சேர நினைப்பவர்கள் குருமார்களை நாட மாட்டார்கள். மக்கள் தாமே மதம் மாறினால் குருமார்கள் பொறுப்பாகார். ஆனால் மதமாற்றத்தையும் தடுத்து, அவர்கள் உய்வு பெறுவதற்கான வழிவகைகளைச் செய்ய இயலாமல் வெறுமனே சீடர் கூட்டத்தைப் பெரிதாக்கிக் கொண்டு போனால் அவ்வாறு செய்வோருக்குப் பாபமேற்படும். சீடர்களை பகவானை வழிபடுமாறு செய்யாமல் தனிமனிதனை வழிபடுமாறு செய்தல் மிகவும் பெரிய குற்றமாகும்.

பதில் : மதம் மாறும் எண்ணமுள்ளவர் ஒரு குருவை நாடவே மாட்டார்கள். ஆனால் சீடர்களை மதம் மாறாமல் இருக்கச் செய்து, அவர்களுக்கு நன்மை செய்ய இயலாவிடில் குருவுக்குப் பாபம் உண்டாகும். குருவை மட்டும் சரணடைந்து பகவானை சரணடையாவிடில் அதுவும் குற்றமே.

கேள்வி : குருவை நன்கறிவது எவ்வாறு? அவரை எவ்வாறு சோதித்தறிவது?

பதில் : குருவை யாரும் பரீக்ஷை செய்ய இயலாது. ஏனெனில் ஒருவரைப் பரீக்ஷை செய்பவர் அவரை விடப் பெரியவராக இருக்க வேண்டும். இந்நிலையில் எவரையும் குருவாக வரிக்காமல் ஸத்ஸங்கம், ஸ்வாத்யாயம் இவற்றில் ஈடுபட்டிருக்க வேண்டும். இந்நிலையில் துர்குணங்கள் விலகி, பகவானிடம் ஈடுபாடு உண்டாக்கும் மஹான்களின் தொடர்பு கொள்ளலாம். அவரிடம் குரு-சிஷ்ய பாவத்தை ஏற்காமலிருப்பதே நல்லது. அவரிடமும் குறைபாடுகள் தென்பட்டால் அங்கிருந்து விலகலாம்.

உண்மையில் தன்னைத்தானே பரீக்ஷை செய்து பார்த்துக் கொள்ள வேண்டும். இதைப்பற்றி ஒரு கதை உண்டு. ஓர் இளம் வயது அரசர் தமது ராஜ்யத்தில் உள்ள வயதான அறிவு முதிர்ந்த பெரியோர்களை அழைத்தார். அவர்களிடம் தன்னுடைய பாட்டன், தந்தை, தான் இம்மூவரில் யாருடைய அரசாட்சி சிறந்ததாக இருந்தது என்று கேட்டான். அதற்கு ஒரு முதியவர், ''நாங்கள் உங்கள் நாட்டுமக்கள். எனவே உங்களை மதிப்பிட முடியாது. ஆனால் எனது கருத்தைக் கூறுவேன்'' என்றார். மன்னரும் அதற்கு சம்மதித்தார்.

''நான் வாலிபனாக இருந்தபோது உங்களது பாட்டனாரின் ஆட்சி நடந்து கொண்டிருந்தது. ஒருநாள் இரவில் காட்டில் சென்று கொண்டிருக்கையில் ஒரு பெண்ணின் அழுகுரல் கேட்டது. அவளை நெருங்கி விசாரித்தபோது அவள் தனது குழுவினருடன் தாய் வீட்டில் இருந்து புகுந்த வீட்டுக்குச் செல்கையில் கொள்ளைக்காரர் களால் வழிமறிக்கப்பட்டபோது ஓடி வந்து இக்காட்டில் ஒளிந்து கொண்டதாகவும், இப்போது வழிதெரியாமல் திண்டாடுவதாகவும் கூறினாள். அவளிடமிருந்து அவளது புகுந்த வீட்டினரின் முகவரி அறிந்து அவளது புகுந்தவீட்டில்

கொண்டு சேர்த்தேன். அவளது புகுந்த வீட்டினர் அவள் இறந்ததாக எண்ணிக் கவலையில் மூழ்கி இருந்தனர். அவளைக் கண்டதும் மனமகிழ்ந்து எனக்கு வெகுமதியளிக்க முயன்றனர். ஆனால் நான் எனது கடமையைச் செய்ததாகக் கூறி அங்கிருந்து வந்து விட்டேன்.

சிலகாலம் கழித்து உங்கள் தந்தையின் ஆட்சி நடந்து கொண்டிருக்கும்போது எனது வியாபாரத்தில் நஷ்டம் ஏற்பட்டுப் பணக்கஷ்டம் ஏற்பட்டது. அப்போது என் மனத்தில் முன்பு காப்பாற்றிய அந்தப் பெண்ணிடமிருந்து நகைகளை எடுத்துக் கொண்டிருக்கலாம். அவளுடைய மாமனார் கொடுத்த வெகுமதியை வாங்கிக் கொண்டிருக்கலாம். அவ்வாறு செய்திருந்தால் இப்படி பணக்கஷ்டம் அனுபவிக்க நேர்ந்திராது என்ற எண்ணம் தோன்றியது.

இப்பொழுது தங்கள் அரசாட்சி நடந்து கொண்டிருக் கிறது. இப்பொழுது என் மனத்தில் எழும் எண்ணத்தைச் சொல்லவே வாய் கூசுகிறது. ஆயினும் நீங்கள் கேட்பதால் கூறுகிறேன். என்மனத்தில் இப்பொழுது அந்தப் பெண்ணை பயமுறுத்தியோ அல்லது ஏமாற்றியோ அழைத்துவந்து மணந்து கொண்டிருந்தால் எனக்கு மனைவியும் கிடைத்திருப்பாள்; நகையும் கிடைத்திருக்கும் என்று தோன்றுகிறது'' என்று தமது அனுபவத்தை வெளியிட்டார்.

இம்மூன்று நிலைகளையும் கேட்ட அரசன் அம்முதியவரின் புத்திக்கூர்மையை வியந்து தனது நிலையை உணர்ந்தான். மன்னன் எவ்வழி மக்களும் அவ்வழி என்பதையும் உணர்ந்து கொண்டான்.

கருத்து யாதெனில் குருவைப் பரீக்ஷை செய்ய இயலாது. நம்மை நாமே சோதித்து உணரலாம். எவரெவரின்

தொடர்பால் நமது எண்ணத்தில், வாழ்க்கையில், நடத்தையில் என்னென்ன மாற்றங்கள் ஏற்படுகின்றன என்பதை நாமே உணரலாம்.

**கேள்வி** : இதிஹாஸங்கள் குருவின் தேவையை உணர்த்துகின்றனவே?

பதில் : இதிஹாஸத்தைக் கொண்டு ஸத்யத்தை நிர்ணயம் செய்ய முடியாது. ஏனெனில் யார் எந்தச் சூழ்நிலையில் என்ன செய்தார் என்பதை அறுதியிட்டுக் கூற முடியாது. எனவே இதிஹாஸங்கள் நல்வழியைக் காட்டுமே தவிர ஸத்ய நிர்ணயம் சாஸ்த்ரவிதியைக் கொண்டே செய்யப்படுகினறன.

குருவாக விழைபவர்களே குருவின் முக்யத்தைப் பற்றி ப்ரசாரம் செய்வர். எனவே இக்கலியுகத்தில் மிகுந்த எச்சரிக்கையுடன் இருக்க வேண்டும்.



## துறவியர், ஸாதகர்கள், கீர்த்தனம் புரிவோர் ஆகியோருக்கு ஒரு தாழ்மையான வேண்டுகோள்

ஸ்ரீபரமாத்மதேவர், அவருடைய பக்தர்களின் க்ருபை, ஆணை இவற்றால்தான் நான் ஸன்யாஸி ஸாதகர்களின் ஒழுக்கம், ஸாதனை ஆகியவற்றின் தன்மைகளைப் பற்றி எழுத முயல்கிறேன். இவற்றை வற்புறுத்துவதற்கான தகுதி ஒழுக்கம் ஆகியவை என்னிடம் இல்லையெனினும், சாஸ்த்ரம், மஹான்கள் ஆகியோரின் நடைமுறைகள் எனக்கு பேருகப்பைத் தருவதால், அவற்றைப் பற்றி எழுதுவதையே எனது பாக்யமாகக் கருதுகிறேன். நான் அறிந்தவற்றையும், கேட்டவற்றையும் இங்கு எழுதுகிறேன். இக்கட்டுரையின் தவறுகளை மன்னிக்கவும்.

ஸாதகன் மகிழ்ச்சி-வருத்தம், காம-க்ரோதம் இவற்றை விலக்க முயற்சி செய்ய வேண்டும். பெண்-பொருள் இவற்றில் கவர்ச்சி ஏற்பட்டால் வீழ்ச்சி ஏற்படும். மேற்குறித்த குணங்கள் அந்தக்கரணத்தின் மாறுபாடே தவிர, அந்தக்கரண தர்மமன்று. இவற்றை அந்தக்கரண தர்மமாக எண்ணுபவர் சரீரம் உள்ளவரை அவையும் இருக்கும் எனக் கூறுகின்றனர். இவ்வாறெண்ணி அக்குணங்களை விலக்க முயற்சி செய்யாதவர் நல்ல ஸாதகர் கூட அல்லர்.

உண்மையான ஞானியிடம் காமம், க்ரோதம் போன்ற மாசுகள் அறவே இருப்பதில்லை. சாஸ்த்ர ப்ரமாணங்கள் மூலம் ப்ரம்மத்தை நிரூபணம் செய்பவர், ஞானத்தைப் பற்றிய தர்க்கம் நிறைந்த நூல்கள் எழுதுபவர் இவர்களை ஞானி என்றெண்ண வேண்டாம். இவை படிப்பறிவால் வருபவை.

நாமகீர்த்தனமும் பகவானுக்காவே செய்ய வேண்டுமே தவிர உலகோர் புகழ்வதற்காக அன்று. பகவான் நம்மெதிரில்

உள்ளார். அவரது உகப்புக்காக நான் அவரது நாமகுண ரூபத்தைப் பாடுகிறேன் என்றெண்ணிக் கீர்த்தனம் செய்ய வேண்டும். பகவத் த்யானத்தில் மூழ்கிக் கீர்த்தனம் செய்ய வேண்டும். இத்தகைய பாவம் ஏற்படாவிடில் அதற்கான அப்யாஸம் செய்ய வேண்டும். பகவந்நாமத்தில் ச்ரத்தையும், அன்பும் கொண்டு பகவந்நாமத்தைக் கூறவேண்டும்.

பகவந்நாம கீர்த்தனம் செய்பவர் தெய்விக இயல்புடை யோராய் இருத்தல் வேண்டும். நமது நடத்தையால் பவித்ரமான ஸங்கீர்த்தனத்திற்கும், பகவானுக்கும் இழுக்கு வராவண்ணம் எச்சரிக்கையுடன் இருக்க வேண்டும்.

நமது நடத்தை தூயதாக இல்லாவிடினும் தனிமையில் கீர்த்தனம் செய்ய வேண்டும். நாமகீர்த்தனம் தூய்மை செய்துவிடும் என்னும் செருக்கோடு தீயநடத்தையில் ஈடுபட லாகாது. ஸங்கீர்த்தனத்தின் துணைகொண்டு வர்ணாச்ரம தர்மங்களை விலக்கலாகாது. எளிமையுடனும், கபடம், காமனை இல்லாமல், ப்ரேமையுடன் பகவானின் நாம குணங்களைப் பாட வேண்டும்; பிறரையும் பாடச் செய்ய வேண்டும். எவருக்கும் உபதேசம் செய்யலாகாது. புகழிலிருந்து விலகி இருத்தல் வேண்டும். பணத்தாசை கொள்ளக்கூடாது.

கீர்த்தனம் செய்யும் சமயம் பணம், பதவி, படிப்பு இவற்றால் செருக்கடையாமல் மனமுருகிப் பாடவேண்டும். பகவத்நாம ஸங்கீர்த்தனத்திற்கு நமது நடத்தையால் இழுக்கு ஏற்படாவண்ணம் பார்த்துக் கொள்ள வேண்டும். வெளி வேஷத்திற்காக அல்லாமல் உண்மையில் ப்ரேமபாவத்துடன் ஆடிப்பாட வேண்டும்.

நாம் விருப்பு-வெறுப்பு, காம க்ரோதங்கள் போன்ற வற்றை அந்தக்கரணங்களின் இயல்பாகவே கருதி

வருகிறோம். இது முற்றிலும் தவறு. விருப்பு-வெறுப்பு போன்றவை அந்தக்கரணத்தின் இயல்பாகா. அவை வெறும் மாறுபாடுகளே. உடல் அழிவுறும் வரையில் அந்தக்கரணங் களும் அழிவுறா. ஆகவே விருப்பு-வெறுப்பு போன்றவற்றை அந்தக்கரணத்தின் இயல்பாகவே கருதுவோர் அந்தக்கரணம் அழியாமல் இருக்கும்வரை விருப்பு-வெறுப்பு போன்ற விகாரங்களும் அழியாமலேயே இருக்கும் என்றே கருதுவர். அவ்விதம் கருதுவோர் உடல் அழியும்வரை அழியாமல் இருக்கும் அந்தக்கரணம் சார்ந்த விருப்பு-வெறுப்பு போன்ற மாசுகளும் நிலைத்தவையே என்னும் தவறான முடிவு காரணமாக அத்தகைய மாசுகளையும், குறைபாடுகளையும் களைய முயலாமல் இருக்கவும் வாய்ப்புள்ளது. இவர்கள் நல்ல ஸாதகர்களாகவும் வாய்ப்பில்லை.

அறிவாற்றலும், பேச்சாற்றலும் மிக்கவர்கள் பரம்பொருளைப் பற்றி நிரூபணம் செய்து அழகிய உரைகளை இயற்றலாம்; வெரு நேர்த்தியாகச் சொற்பொழிவாற்றலாம். ஆனால் அவர்கள் உண்மையான ஞானியராகார். இவை வெறும் நூலறிவால் மட்டுமே பெறத்தக்கவை. ஞானியான சுகதேவரின் பாத்திரத்தை ஒரு நாடகத்தில் ஏற்று நடிப்பவர் ஞானியாகிவிட முடியாது. ஞானி என்பவன் அக்ஞானக் கடலை முற்றிலும் கடந்தவன்; விருப்பு-வெறுப்பு காமம் க்ரோதம் போன்ற மாசுகள் அக்ஞானத்தில் மட்டுமே உள்ளன. ஞானத்தில் இவை சிறிதும் கிடையா.

ஒருவன் ப்ரம்ம நிலையை அடைவதற்கு முன்னரேயே வெறும் புத்தகப் படிப்பால் வந்த அறிவைத் துணைக் கொண்டு தன்னை ஞானியாகவே நினைத்துக் கொண்டு, சாஸ்த்ரங்கள் விதிக்கும் விதி-நிஷேதங்களைப் புறக்கணித்து, ஸாதனைகளில் ஈடுபடாமல் இருந்து விடுபவன் வீழ்ச்சி பெறுகிறான். அக்ஞானம் நீங்காதவரை புலன்களுக்குப்

புலனுகர்வில் நாட்டம் நீங்காது, பாபமேற்படுவதற்கு முதன்மையான காரணம் இத்தகைய போக இச்சையே. ஆக, காமக்ரோதங்களை அந்தக்கரணத்தின் நீங்கா இயல்பாகவே ஒருவன் கருதிவிட்டால் கடைத்தேறுவது எப்படி?

போலித்தனம் மிக்க ஞானத்தைக் காட்டிலும், அக்ஞானமே உயர்ந்தது. அக்ஞானியாவது பாபங்களுக்குச் சிறிது அஞ்சுவான். போலி ஞானியோ தான் பாப-புண்யங் களுக்கு அப்பாற்பட்டவன் என்று காட்டிக் கொள்வதற்காகவே பாவச் செயல்களில் ஈடுபடுவான். ஆகவே பகட்டுக்கும் போலித்தனத்துக்கும் சிறிதும் இடமளிக்கக் கூடாது; உண்மையான துறவுக்கே முயலுதல் வேண்டும்.

யாவத$_3$ாயுஸ்த்வயா வந்த்$_3$யோ வேத$_3$ாந்தோ கு$_3$ருரீஶ்வர: ।
மநஸா கர்மணா வாசா ஶ்ருதேரேவைஷ நிஶ்சய: ॥
*(தத்வோபதேசம் 86)*

ஆதி சங்கர பகவத்பாதரவர்களின் இவ்வரிய உபதேச மொழிகளுக்கிணங்க சாஸ்த்ர விதிகளை எப்பொழுதும் மதித்து நடக்க வேண்டும். துறவியர் இல்லறத்தாரிடம் நெருங்கிப் பழகலாகாது. பெண்களின் படத்தைக்கூடக் காணலாகாது. பணத்தைக் கையாலும் தொடக்கூடாது. அஹங்கார-மமகாரங்கள் சிறிதும் இருக்கக் கூடாது. மதிப்பு, புகழ் ஆகியவற்றைச் சற்றும் ஏற்கக் கூடாது. வைராக்யத்தைப் பிசகாமல் பாதுகாக்க வேண்டும். புலனடக்கம் இன்றியமை யாதது. பொருட்களைச் சேமித்து வைக்கக் கூடாது. வீடு, ஆசிரமங்கள் கட்டிக் கொள்ளக் கூடாது. கூட்டம் சேர்க்கக் கூடாது. வீண் வார்த்தைகளைப் பேசக் கூடாது. காம, க்ரோத, லோப, மோஹ, மத, மாத்ஸர்யங்களிலிருந்து விடுபட்டிருக்க வேண்டும். யாரிடமும் பகைமை பாராட்டக் கூடாது. ப்ரம்மசர்யத்தைக் கடைப்பிடிக்க வேண்டும். ஆத்ம

சிந்தனையோ, பகவத்ஸ்மரணமோ செய்து வரவேண்டும். இவற்றைக் கடைப்பிடிக்காத துறவி வீழ்ச்சி பெறுகிறான். உய்வதில் நாட்டம் உடைய ஸந்யாஸி ஸந்யாஸ ஆசிரமத் திற்குரிய கடமைகளைத் தவறாமல் பின்பற்ற வேண்டும். விதி-நிஷேதங் கடந்த மஹாபுருஷர்களும் உலகுக்கு வழிகாட்டும் பொருட்டு சுபகர்மங்களைப் பற்றின்றிக் கடைப் பிடிக்கின்றனர்.

பக்தனாக விழையும் ஒரு ஸாதகனும் பகவானையே புகலாகக் கொண்டு எப்பொழுதும் வழிபாடுகளில் ஈடுபட் டிருக்க வேண்டும். பொன், பொருள், புகழ் ஆகியவற்றை மனத்தாலும் விரும்பக் கூடாது. பகவானுடைய நாம, குண, வைபவங்களை ப்ரேமையுடன் இடையறாமல் கீர்த்தனம் செய்து வரவேண்டும். புகழ் பெறுவதற்காகப் பாடுவதோ, பழிக்கஞ்சிப் பாடாதிருப்பதோ கூடாது. பக்தியை ப்ரகடனம் செய்து விளம்பரத்திற்கு இடமளிக்கக் கூடாது. பிறர் புகழ்வதற்கும், போற்றுவதற்கும் இடமளிக்கக் கூடாது. பெண்களின் தொடர்பும், பெண்களிடம் தொடர்பு கொண்ட வரின் தொடர்பும் கட்டாயம் விலக்கத்தக்கவை. பொருளாசை கூடாது; புகழாசையோ மலத்தைப் போல் விலக்கத்தக்கது.

கீர்த்தனம் செய்ய நிச்சயித்தால் நன்கு செய்ய வேண்டும்; பகவானின் முகமலர்ச்சிக்காகவே செய்ய வேண்டும்; ஜனரஞ்ஜகமாகச் செய்யக் கூடாது. "என்னுடைய ப்ரபு இப்பொழுது, இந்த இடத்தில் என் முன்பு எழுந்தருளி யுள்ளார்; அவரது திருமுன்னிலையில் அவருக்காகவே நான் கீர்த்தனம் புரிகிறேன்" என்னும் உறுதியுடன் கீர்த்தனம் செய்ய வேண்டும். பகவானுடைய திருநாமங்களிலும், திருக்கல்யாண குணங்களிலும் மனத்தை ஒன்றச் செய்து பொருளில் ஆழ்ந்தவாறு மனம் லயித்துக் கீர்த்தனம் செய்ய வேண்டும். இதற்கான பயிற்சிகளில் ஈடுபடவேண்டும்.

கேட்போரைக் கவர்வதற்காகக் கீர்த்தனம் செய்யக் கூடாது. "எனது பாட்டு கேட்போருக்கு இனிமையாக இருந்ததா? அவர்கள் புகழ்வார்களா?" என்னும் எண்ணங்களை ஒழித்து இறை நினைவு மட்டிலுமே ஓங்கி இருக்குமாறு செய்து கொள்ள வேண்டும். பகவந்நாமம் ஒன்றிலேயே உள்மனத்தைச் செலுத்தி பகவந்நாமங்களை உச்சரிக்க வேண்டும். அதில் மட்டுமே ச்ரத்தா விச்வாஸங்கள் இருக்க வேண்டும். இத்தகைய முழு ஈடுபாடு உள்ளோரின் நாமகீர்த்தனம் மிகுந்த பயன்தர வல்லது. ஸ்ரீசைதன்ய மஹா ப்ரபுவின் திருமுகத்திலிருந்து வெளியான நாமம் கேட்போரைப் பித்தேறச் செய்யும் பெருவலிமை கொண்டதாக இருந்தது. ஏனெனில் அதில் மஹாப்ரபுவின் ப்ரேம சக்தி நிரம்பியிருந்தது.

ஒன்றை நினைவில் கொள்ள வேண்டும். பகவந் நாமங்களைக் கீர்த்தனம் செய்வோர் நல்லொழுக்கம் மிக்கவர்களாக இருத்தல் வேண்டும்; அவர்களிடம் தெய்வ இயல்புகள் குடி கொண்டிருக்க வேண்டும். திருநாம கீர்த்தனம் செய்து ஆடிப்பாடினாலும் அவர்களிடம் நல்லொழுக்கம் இல்லையெனில் அவர்களால் மாந்தரிடம் நல்லதொரு தாக்கத்தை ஏற்படுத்த இயலாது. பெருவாரியானோர் அவர்களைப் பின்பற்றத் தலைபட்டால் நல்லொழுக்கங்களுக்கான முக்கியத்துவம் மறைந்துபோய் பிறருக்குக் கடவுளிடமும் ஈடுபாடு குறைந்து போய்விடும்.

தம்மிடம் நல்லொழுக்கம் இல்லையாயினும் கீர்த்தனத்தைக் கைவிடலாகாது; தனிமையில் நாமகீர்த்தனம் செய்ய வேண்டும். எவ்வாறாயினும் நல்லொழுக்கம் ஏற்பட வேண்டும் என்று இறைவனிடம் அழுது மன்றாடிக் கேட்க வேண்டும். ஸங்கீர்த்தனத்தின் பெயரால் தீய ஒழுக்கங்களை மறைத்தல் கூடாது; அவை சரி என்று வாதிடவும் கூடாது.

பகவந்நாம கீர்த்தனம் அரியதோர் உயர்ந்த ஸாதனம் ஆகும். எனவே மிக உயர்ந்த பாவத்துடன் ஸாதனை செய்து, உயர்ந்த நடத்தையுடன் கீர்த்தனம் செய்ய வேண்டும். தூய்மையான மஹான்களால் செய்யப்படும் பகவந்நாம ஸங்கீர்த்தனம் ஒலிக்குமிடமெல்லாம் தூய்மை அடைந்தது பெற்று அங்கிருக்கும் ஜீவர்கள் அனைவருமே மேன்மை பெறுவர்.

## முடிவுரை

நம் தமிழகத்திலும் அடியார்கள் பலர் ஆண்டவனிடமிருந்து நேரடியாக அருள் பெற்ற வரலாறுகள் உள்ளன. திருநாரையூர் நம்பியாண்டார் நம்பி என்ற அடியார் விநாயகரிடமிருந்து புலமையும், மெய்யறிவும் பெற்றார். அந்த விநாயகர் "பொல்லாப் பிள்ளையார்" என்ற பெயருடன் திகழ்ந்து வருகிறார். திருஞானசம்பந்தரும், நக்கீர தேவரும், அருணகிரி நாதரும் இறையருளால் புலமை பெற்றுய்ந்தனர். மாணிக்கவாசகர் திருப்பெருந்துறையில் சிவபெருமானையே ஞானாசிரியனாகப் பெற்றார். திருமங்கையாழ்வார் திருமாலிடமிருந்து திரு அஷ்டாக்ஷர மந்திரத்தைப் பெற்றார். "பீதகவாடைப்பிரானார் பிரமகுருவாகி வந்து" என்றருளிச் செய்தார் பெரியாழ்வார். மூககவி காஞ்சீபுரத்தில் காமாக்ஷிதேவியின் அருளைப் பெற்றார். ஸ்ரீரமண பகவான் மானுட குருமார்களின் துணையின்றியே ஸமாதியில் அமர்ந்தார்.

இத்தகைய அரிய எடுத்துக்காட்டுகளை வழிகாட்டியாகக் கொண்டு அன்பர்கள் இறைவனிடமே உண்மையான ஈடுபாடுகாட்டி உய்வு பெறலாம். கலியுகத்தில் போலி குருமார்களை நம்பி ஏமாறாதிருக்கும் பொருட்டே இந்த அருளுரை வெளியிடப்படுகிறது.

கீதையைப் பிரசாரம் செய்பவரையே பகவான் மிகவும் நேசிப்பார்.

॥ ஸ்ரீஹரி ॥

## கீதாப்ரஸ், கோரக்பூர். (உ.பி.)

மிகவும் மலிவு விலையில் வழங்கும் அரிய ஆன்மிக நூல்கள் கிடைக்குமிடம் :

## கோபால் ஸேவா ட்ரஸ்ட்

81, பகவத்கீதா நகர், ஈரோடு - 638 003. ☎ : 0424-213976, 210991

பாராயணப் புத்தகங்கள் :

| | | |
|---|---|---|
| 1. * | ஸ்ரீமத்பகவத்கீதை - ஸாதக ஸஞ்ஜீவனி (முதல் ஒன்பது அத்யாயங்கள்) | 85 00 |
| 2. * | கீதை ஒரு கண்ணாடி | |
| 3. 1256 | அத்யாத்ம ராமாயணம் (பிளாஸ்டிக் கவருடன்) | 60 00 |
| 4. 800 | ஸ்ரீமத் பகவத்கீதா – தத்வவிவேசனீ | 60.00 |
| 5. 823 | ஸ்ரீமத்பகவத்கீதா-பதவுரை-பொழிப்புரை " | 85.00 |
| 6. 743 | ஸ்ரீமத் பகவத்கீதா மூலம் (ஸம்ஸ்க்ருதம்–தமிழ்) (பிளாஸ்டிக் கவருடன்) | 30.00 |
| 7. 793 | ஸ்ரீமத் பகவத்கீதா மூலம் விஷ்ணு ஸஹஸ்ரநாம ஸ்தோத்ர ஸஹிதம் (பாக்கெட் சைஸ்) | 18.00 |
| 8. 795 | ஸ்ரீமத் பகவத்கீதா – பொழிப்புரை | 5.00 |
| 9. 389 | கீதா மாதுர்யம் (பகவத்கீதா – வினா-விடை) | 5.00 |
| 10. B.10 | லலிதா ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரம் | 8.00 |
| 11. 794 | விஷ்ணு ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரம் | 10.00 |
| 12. B.6 | கந்த ஷஷ்டி கவசம் | 2.00 |
| 13. B.12 | ஸ்ரீ அபிராமி அந்தாதி | 3.00 |
| 14. B.13 | விநாயகர் அகவல் | 4.00 |
| 15. B.14 | திருமுருகாற்றுப்படை | 3.00 |
| 16. B.15 | ஷண்முக கவசம் | 3.00 |
| 17. B.16 | கந்தர் அனுபூதி | 3.00 |
| 18. B.17 | திருவெம்பாவை | 3.00 |
| 19. B.18 | ஸ்ரீ ஸ்கந்தகுரு கவசம் | 3.00 |
| 20. B.19 | நமச்சிவாய மாலை | 4.00 |
| 21. B.11 | சிவபுராணம் | 3.00 |
| 22. B.7 | திருப்பாவை | 3.00 |
| 23. 600 | ஸ்ரீஹனுமாந் சாலிஸா | 4.00 |
| | | 2.00 |

* இக்குறியிட்ட புத்தகங்கள் மிக விரைவில் வெளிவர உள்ளது.

இதை உங்கள் நண்பர்களுக்குத் தெரியப்படுத்துவதால் அதற்குரிய பாக்யமும், புண்யமும் வந்து சேரும். உங்களால் இயன்ற அளவு நேரிலோ, தபால் மூலமோ, மாதஇதழிலோ, நாளிதழிலோ, வார இதழிலோ, ஆன்மீகப் பத்திரிகைகளிலோ, டி.வி. யிலோ, வானொலியிலோ அல்லது உங்கள் சார்பாக நோட்டீஸ் அச்சடித்தோ விளம்பரம் செய்தால் கீதையைப் பிரசாரம் செய்த புண்யம் மற்றும் சகல ஸம்பத்துகளும் கிடைக்கும். மேலும் பகவானுக்கு மிகவும் பிரியமானவன் என்று ஸ்ரீக்ருஷ்ண பரமாத்மா கீதை அத்யாயம் 12-ல் ச்லோகம் 14 முதல் 17 வரையும், மேலும் அத்யாயம் 18-ல் ச்லோகம் 66 முதல் 72 வரை கூறுகிறார்.

இந்நூல்கள் அனைத்தும் அனைவரும் வாங்கும் வகையில் மிக மலிவான விலையில் கிடைக்கும். மேலும், "கீதா, ராமாயணம், பாகவதம்" மற்றும் ஆன்மிக நூல்கள், ஹிந்தி, ஸமஸ்க்ருதம், தெலுங்கு, மலையாளம், கன்னடம், ஆங்கிலம் ஆகிய மொழிகளில் மலிவு விலையில் கிடைக்கும்.

கீதையைப் பிரசாரம் செய்பவரையே பகவான் மிகவும் நேசிப்பார்.

॥ ஸ்ரீஹரி ॥

# கீதாப்ரஸ், கோரக்பூர். (உ.பி.)

மிகவும் மலிவு விலையில் வழங்கும் அரிய ஆன்மிக நூல்கள் கிடைக்குமிடம் :

## கோபால் ஸேவா ட்ரஸ்ட்

81, பகவத்கீதா நகர், ஈரோடு - 638 003. ☎ : 0424-213976, 210991

**அறிவுரை நல்கும் புத்தகங்கள் :**

| | | |
|---|---|---|
| 1. 553 | குடும்பத்தில் எப்படி இருக்க வேண்டும்? | 8.00 |
| 2. 423 | கர்ம ரஹஸ்யம் | 3.00 |
| 3. 568 | சரணாகதி | 4.00 |
| 4. 499 | நாரத பக்தி ஸூத்ரம் | 2.00 |
| 5. 591 | மஹாபாவத்திலிருந்து உன்னைக் காத்துக் கொள் - பிள்ளைகளின் கடமைகள் | 3.00 |
| 6. 536 | கீதை கற்பதன் பயன்கள் | 5.00 |
| 7. 607 | எல்லோருக்கும் மேன்மை எப்படி [illegible] | [illegible] |
| 8. 606 | மிக உயர்ந்த நிலையை அடை[illegible] | 2.00 |
| 9. 569 | உருவ வழிபாடு | 1.50 |
| 10. 550 | திருநாமஜபத்தின் மஹிமை | 1.50 |
| 11. 551 | தூய்மையான உணவுப் பழக்கம் | 1.50 |
| 12. 466 | ஸத்ஸங்கத்தின் ஸாரமான தத்வங்கள் | 1.00 |
| 13. 655 | ஒன்றே செய்மின்! நன்றே செய்வீர்! | 5.00 |
| 14. 742 | கருக்கலைப்பு சரியா? தவறா? | [illegible] |
| 15. 805 | தாய்மையின் அவலநிலை | [illegible] |
| 16. 850 | மஹான்களுடைய அமுத மொழிகள் | 10.00 |
| 17. 952 | மஹான்களின் மணி மொழிகள் | 10.00 |
| 18. 953 | மஹான்களின் சீரிய உபதேசம் | 10.00 |
| 19. 1110 | ஆயிரம் அமுதத் துளிகள் | 5.00 |
| 20. 1117 | நாட்டின் இன்றைய நிலையும் அதன் விளைவுகளும் | 5.00 |
| 21. 1243 | உண்மையான சுகம் | 5.00 |
| 22. 1007 | கடையோனுக்கும் கடவுட் காட்சி | 8.00 |
| 23. 792 | முக்கியமான எச்சரிக்கை | 2.00 |
| 24. 1353 | ராமாயணத்தில் முக்கிய பாத்திரங்கள் | 7.00 |
| 25. 1354 | மஹாபாரதத்தில் முக்கிய பாத்திரங்கள் | 7.00 |
| 26. 606 | மிக உயர்ந்த நிலையை அடைவதற்கான வழி | 2.00 |
| 27. 569 | உருவ வழிபாடு | 1.50 |
| 28. 550 | திருநாமஜபத்தின் மஹிமை | 1.50 |
| 29. 551 | தூய்மையான உணவுப் பழக்கம் | 1.50 |
| 30. 466 | ஸத்ஸங்கத்தின் ஸாரமான தத்வங்கள் | 1.00 |
| 31. 655 | ஒன்றே செய்மின்! நன்றே செய்வீர்!! | 5.00 |
| 32. 742 | கருக்கலைப்பு சரியா? தவறா? | 2.50 |
| 33. 805 | தாய்மையின் அவலநிலை | 2.00 |
| 34. 850 | மஹான்களுடைய அமுத மொழிகள் | 10.00 |
| 35. * | இன்றியமையாத கல்வி | |
| 36. * | ஸாதனை நெறி | |



இப்புத்தகங்கள் – M.O., D.D. யின் பேரில் அனுப்பி வைக்கப்படும்.
போஸ்டேஜ் மற்றும் கூரியர் சார்ஜ்கள் தனி.

உற்றார் உறவினர்களுக்கு விசேஷ நாட்களில் பரிசளிக்க ஏற்றவை.

கீதையைப் பிரசாரம் செய்வோருக்கு சகல சம்பத்துகளும் கிட்டும்.

॥ ஸ்ரீஹரி ॥

**கீதாப்ரஸ், கோரக்பூர். (உ.பி.)**

மிகவும் மலிவு விலையில் வழங்கும் அரிய ஆன்மிக நூல்கள் கிடைக்குமிடம்:

**கோபால் ஸேவா ட்ரஸ்ட்**

81, பகவத்கீதா நகர், ஈரோடு - 638 003. ☎ : 0424-213976, 210991

**கதைப் புத்தகங்கள் :**

| | | | |
|---|---|---|---|
| 1. | 608 | பக்தராஜ ஹனுமான் | 6.00 |
| 2. | 601 | பகவான் ஸ்ரீக்ருஷ்ணன் | 5.00 |
| 3. | 642 | ஸ்ரீக்ருஷ்ணனின் நண்பரான உத்தவரின் கதை | 5.00 |
| 4. | 127 | பயனுள்ள கதைகள் | 7.00 |
| 5. | 646 | பல்சுவைக் கதைகள் | 7.00 |
| 6. | 644 | சுசீலா - ஓர் லக்ஷ்யப் பெண்மணி | 3.00 |
| 7. | 643 | பகவான் உறையும் ஐந்து இடங்கள் | 3.00 |
| 8. | 645 | மஹாபாரதத்திலுள்ள நள - தமயந்தி கதைகள் | 5.00 |
| 9. | 609 | „ ஸாவித்ரி - ஸத்யவான் கதைகள் | 2.00 |
| 10. | 741 | மஹாத்மா விதுரர் | 3.00 |
| 11. | 1248 | பக்த சரித்ரம் | 6.00 |
| 12. | 1134 | கீதையின் பெருமையை விளக்கும் கதைகள் | 8.00 |
| 13. | 365 | பசுப் பராமரிப்பின் நற்பயன்கள் - கதைகள் | 8.00 |
| 14. | | கிஃப்ட் பாக்கெட் (13 புத்தகங்கள்) | 50.00 |
| 15. | | கிஃப்ட் பாக்கெட் (12 புத்தகங்கள்) | 60.00 |
| 16. | | கிஃப்ட் பாக்கெட் (14 புத்தகங்கள்) | 100.00 |
| 17. | 647 | கண்ணன் (சித்ரகதை) | |
| 18. | 649 | கோபால் (சித்ரகதை) | |
| 19. | 650 | மோஹன் (சித்ரகதை) | |
| 20. | 648 | ஸ்ரீக்ருஷ்ணன் (சித்ரகதை) | |
| 21. | * | வாஸுதேவனே அனைத்தும் | |
| 22. | * | நல்வாழ்க்கைக்கான நல்லுரைகள் | |
| 23. | * | தியாகத்தில் பகவானை அடைதல் | |
| 24. | * | பகவானை அடைவது எளிதே | |
| 25. | * | கீதா, ராமாயண, மஹாபாரத - ஸாரம் | |
| 26. | * | ப்ரஸ்நோத்ரி - கேள்வி-பதில் | |
| 27. | * | அஷ்டலக்ஷ்மி ஸ்தோத்ரம் | |
| 28. | * | ஆதித்ய ஹ்ருதய ஸ்தோத்ரம் | |
| 29. | * | பதினொரு கதைகள் | |

* இக்குறியிட்ட புத்தகங்கள் மிக விரைவில் வெளிவர உள்ளது.

**படங்கள் :**

| | | |
|---|---|---|
| 1. | பஞ்சாம்ருதம் (ஐந்து அம்ருதங்கள்) | 15.00 |
| 2. | ஜயஸ்ரீராம் - எழுத்தில் இராமாயணம் | 20.00 |
| 3. | கீதா உபதேசம் | |
| 4. | 108 திவ்விய தரிசனம் | |